தீபாவளி ஸ்பெஷல்!

குடும்பத்துடன் களிக்க....

# கல்கி

KALKI 30.10.2005 ரூ.7.00
96 பக்கங்கள்



"ரஜினியோடு நடிக்க முடியாது!"

## விஜயகாந்த் பேசுகிறேன்!

- புதிய தொடர்

Free HOME DELIVERY in Chennai!
Courier Delivery Undertaken
Throughout Tamil Nadu!!!

# Diabetics Dezire

## Sweets For Diabetics

(டயபெடிஸ் உள்ளவர்களுக்குகான இனிப்புகள்)



**இந்த தீபாவளி தித்திக்கும் தீபாவளி!**

ANKUR PLAZA (**Near Vani Mahal Towards Panagal Park**)
New No 113 (Old No 52), GN Chetty Road,
T. Nagar, Chennai 600 017
Telephone: 044 - 52121415, 9840334296
E-mail: diabeticsdezire@gmail.com,
Website: www.diabeticsdezire.com



# கோள் மூட்டிய கலைஞர்!



நல்லகண்ணுவுக்கு எண்பது வயதா?! ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது. இந்த வயதிலும் அவரின் சுறுசுறுப்பைக் கண்டு எல்லா அரசியல்வாதிகளுமே வியந்து போகிறார்கள். இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அவரின் எண்பதாம் ஆண்டு நிறைவை விழாவாகவே எடுத்துக் கொண்டாடிவிட்டது. அதிலிருந்து சில துளிகள்..

- விழாவில் தன்னைப் புகழ்ந்து பாடல்கள் பாடப்பட்டதை ஏற்றுக் கொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார் நல்லகண்ணு. தா.பாண்டியனிடமும்,சி. மகேந்திரனிடமும் நிறுத்தச் சொல்லுங்கள் என்று நச்சரித்தபடியே இருந்தார்.
- மேடையில் தலைவர்களுக்கு பெப்சி கம்பெனியின் Aquafina மினரல் வாட்டர் வைக்கப்பட்டது. முதலில் Aquafina ஸ்டிக்கரோடு வைத்தவர்கள், பின்னர் திடீரென அந்த ஸ்டிக்கரை உரித்துவிட்டு வைத்தனர். கொள்கை உறுதியோ!
- ''நல்லகண்ணுவின் வாழ்க்கை ஏட்டின் எந்தப் பக்கத்தைப் புரட்டினாலும் அதில் தியாகத் தழும்புகள் இருக்கும்'' என்று வைகோ பேசியபோது அரங்கம் ஒருமுறை சிலிர்த்தெழுந்தது.
- "உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத தலைவர் நல்லகண்ணு'' என்று டாக்டர் ராமதாஸ் பேசியது, யாருக்கோ 'பன்ச்' வைத்தது போல் இருந்தது.
- வலிமையான கூட்டணியின் தலைவர்களான கலைஞர், வாசன், வைகோ உள்ளிட்டோர் தனித்தனியே வெவ்வேறு நேரத்தில் மேடைக்கு வந்தனர்.
- விழா நான்கு மணிக்கு என்று போடப்பட்டிருந்தது. கலைஞர் வந்த போது மணி ஆறரையைத் தொட்டிருந்தது.
- "வயதால் தம்பி... அனுபவம், தியாகத்தால் அண்ணன் நல்லகண்ணு" என்ற கலைஞர், ''பெண்ணுரிமை பற்றி வெளியே பேசும் நல்லகண்ணு, தனது மனைவியை ஒரேயொருமுறைதான் சினிமாவுக்கு அழைத்துச் சென்றுள்

விழா விழா விழா விழா




ளாராம். இதைச் சொல்லிக் காட்டி குடும்பத்தில் நான் கோள் மூட்டுவதாக நினைக்க வேண்டாம்" என்றபோது அரங்கம் கலகலத்தது.

- ஐ.மு.கூட்டணி விழாவாகவே நிகழ்ச்சி காட்சியளித்தாலும் பி.ஜே.பி.யின் இல. கணேசன் மட்டும் மேடைக்கு வந்து சால்வை அணிவித்துச் சென்றார்.
- விழாவில், சன் டி.வி. வீரபாண்டியன் தொகுத்த மக்களின் மனிதன் மற்றும் நல்ல கண்ணுவின் வாழ்க்கை வரலாறு உள்ளிட்ட சில புத்தகங்கள் அறிமுகம் செய்யப்பட்டு, விற்பனைக்கு வைக்கப்பட்டன.

**- இரா. முத்துக்குமார்**

படங்கள்: **ஸ்ரீஹரி**



**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு





# இயக்குனர்களை

**ஒருவழியாக 'அந்நியன்' தாக்கத்திலிருந்து விடுபட்டு 'மதி'யாக உருமாறி விட்டார் விக்ரம். 'மஜா' படத்தில் அவர் ஏற்று நடிக்கும் இந்த மண்வாசனை பாத்திரத்துக்காக, ஒரு கிராமத்து இளைஞனைப் போல குரல் கொடுத்துக் கொண்டிருந்தவரை டப்பிங் தியேட்டரில் பிடித்தோம்...**

**இத்தனை நாள் தீபாவளி ரேஸில் கலந்துகொள்ளாத ஹீரோவாக இருந்தீர்கள். இந்த வருடம் என்ன திடீர் கோதா?**

"அந்நியன் வெளிவர ஒன்றரை வருடம் ஆகிவிட்டது. இது மிகப் பெரிய இடைவெளி. 'இந்த வருடம் உங்களுக்கு மூன்று படம் தருகிறேன்' என்று ரசிகர்களுக்கு உறுதி கொடுத்திருக்கிறேன். அவர்களை மனத்தில் வைத்துத்தான் மஜா படம். ஆரோக்கியமான போட்டி தவறில்லை."

**'மஜா' படத்தின் மூலம் நீங்களும் ரீமேக் கதைகளில் ஆர்வம் காட்டத் தொடங்கிவிட்டீர்களே...?**

'தொம்மனும் மக்களும்' படத்தைப் பார்த்தவுடனேயே, இதில் நாம் நடிக்க வேண்டும் என்று தோன்றியது. முதலில் தயாரிப்பாளர் யார் என்பதை முடிவு செய்துவிட்டு, நல்ல கதை வரும்வரை காத்திருந்து நடிப்பதுதான் எனது வழக்கம். அந்நியனுக்குப் பிறகு ஒரு 'ஹெவி பெர்ஃபாமன்ஸ்' கதையில் நடிக்க வேண்டாம் என்று முடிவு செய்துவிட்டு கதைக்காகக் காத்திருந்தேன். 'ஆட்டோ கிராஃப்', 'அழகி' போன்ற மென்மையான கதைகளும், கிடைக்கவில்லை. 'தூள்', 'சாமி' போல கமர்ஷியல் கதைகளும் கிடைக்கவில்லை. இங்கே அறிமுகமாகும் புதிய இயக்குனர்கள் தீப்பொறிபோல கள்ளென்று இருக்கிறார்கள். ஆனால், இங்கே மலையாளத்தைப் போல கதாசிரியர்கள் இல்லை. நல்ல கதைகளுக்கு இங்கே கடும் பஞ்சம். காத்திருந்தால் தாமதமாகிவிடும் என்று பரபரத்த நேரத்தில்தான் 'தொம்மனும் மக்களும்' பார்த்தேன். புதையல் கிடைத்த மாதிரி ஒரு ஃபீல். அத்தனை பிரமாதமான கலர்ஃபுல் ஸ்டோரி."

**எத்தனை நல்ல கதையாக இருந்தாலும், உங்களுக்காக கதையை மாற்ற வேண்டும் என்று இயக்குனரை நிர்ப்பந்தம் செய்திருப்பீர்களே?**

"என்னைப் பார்த்து இப்படியொரு கேள்வியா? அந்தப் படத்தின் கதையைக் காதலித்ததால்தான் தமிழில் ரீமேக் செய்ய வேண்டும் என்று நினைத்தேன். எனது சமீபத்திய படங்கள் எல்லாவற்றிலும் படத்தின் டைட்டில் கேரக்டராக நான்தான் இருப்பேன். ஆனால் இந்தக் கதையில் என் கேரக்டர் எத்தனை முக்கியமோ, அதே போல மற்ற கேரக்டர்களும் ரொம்ப முக்கியம். இயக்குனரிடம் நான் போட்ட

-விக்ரம் விளக்கம்

ஒரே நிபந்தனை, மற்ற கேரக்டர்களை நீங்கள் எதுவும் செய்துவிடக் கூடாது என்பதுதான். இந்தப் படம் வந்தபிறகு 'உங்கள் படத்தில் ஏன் மற்றொரு கேரக் டருக்கு முக்கியத்துவம் இல்லை?' என்று நீங்கள் கேட்க முடியாது"

**கேரளா மீது அப்படியென்ன உங் களுக்குப் பந்தம்? அங்கே பெரிய சினிமா விழா என்றால், முன் வரிசையில் இருக் கிறீர்கள். எல்லோரும் தெலுங்குக் கதை களை ரீமேக் செய்வதில் ஆர்வம் காட் டும்போது நீங்கள் மலையாளக் கதையைத் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

"தமிழுக்கு முன்பே, தெலுங்கு, மலை யாளப் படங்களில் நடித்திருக்கிறேன். அப்போது தெலுங்கில் எனது படங்கள் எதுவும் வெற்றி பெறவில்லை. ஆனால், மலையாளத்தில் நான் இரண்டாவது ஹீரோவாகப் பண்ணிய படங்கள் எல்லாமே ஹிட். நான் கஷ்டப்பட்டதை மலையாளத்தில் பார்த்திருக்கிறார்கள். இப்போது தமிழில் நான் முன்னுக்கு வந்துவிட்டதைப் பார்த்து அவர்கள் சந்தோஷப்படுகிறார்கள். கடந்த ஆண்டு டாப்டென் ஹீரோக்கள் என்று ஒரு பட்டியலை அறிவித்தார்கள். அதில் எனக்கு மூன்றாவது இடம் கொடுத்த அவர்களது பாசத்தை என்னவென்பது! இத்தனைக் கும் நான் இப்போது எந்த மலையாளப் படமும் பண்ணவில்லை. என்னை ஒரு மலையாள நட்சத்திரமாகவே பார்க்கிறார் கள். தமிழ்ப் படங்களை அப்படியே அங்கே ரிலீஸ் செய்யலாம். தமிழ்ப் படங் களை நேரடியாகப் பார்ப்பதுதான் அவர் களுக்குப் பிடிக்கிறது. டப் பண்ணினால் கூட 'பாண்டி படம்' என்று ஒதுக்கி விடுவார்கள்."

# நிர்ப்பந்தம் செய்கிறேனா?

**சேது, காசி வரிசையில் அரவாணி யாக நடிக்க ஒரு மலையாளக் கதையின் உரிமையை கைப் பற்றி இருக்கிறீர்களாமே?**





"அரவாணி அல்ல. பெண் தன்மை அதிகமுள்ள ஓர் ஆண். 'சாந்து பொட்டு' என்ற மலையாளப் படத்தின் கதை. இந்த மாதிரி ஒரு ரோலை, ஒரு ஆக்ஷன் ஹீரோ பண்ணுவதற்கு ஒரு முறை அல்ல, நூறு முறை யோசிப்பார். அரவாணி சாயல் கொண்ட கேரக்டர்களை, பொதுவாக சினிமாவில் தவறான நோக்கத்தில் காட்டியது தான் அதிகம். ஆனால் இது அப்படிப்பட்ட கேரக்டர் அல்ல. எனது சினிமா வாழ்க்கையில் அது ஒரு மைல்கல்லாக இருக்கும்."

**கமல், ரஜினியிடம் இருக்கும் தோழமை இப்போதுள்ள ஹீரோக்களிடம் இல்லை என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?**



## "அஜீத், விஜய், சூர்யா எல்லோருடனும் நெருக்கமாக இருக்கிறேன்!"



"இல்லை! இது பரபரப்புக்காக கேட்கப்படும் கேள்வி. என்னைப் பொறுத்தவரை விஜய், அஜீத், சூர்யாவில் ஆரம்பித்து சிம்பு, ஸ்ரீகாந்த், ஆர்யா வரை எனக்கு நண்பர்கள். எல்லோருடனும் நெருக்கமாக இருக்கிறேன்.

'மன்மதன்' படம் ரிலீஸாக இருந்த நேரத்தில் ஒரு டி.வி. பேட்டி. அப்போது 'உங்களுக்குப் பிடித்த படம் எது?' என்றார்கள். 'மன்மதன்' என்றேன். 'அந்தப் படத்தை எல்லோரும் பாருங்கள். இன்னொரு விஷயம் சொல்கிறேன், சிம்பு மிகப்பெரிய டைரக்டராக வருவார்' என்றும் சொன்னேன். எனது குழந்தைகள் ஆர்யாவின் ரசிகர்கள். எனது வீட்டுக்குப் பக்கத்தில் ஆர்யா படத்தின் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது. நான் எனது குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு போய் ஆர்யாவைக் காட்டிவிட்டு வந்தேன். 'அய்யோ! விக்ரம் ஆர்யாவைப் பார்க்க வந்தார்' என்று பத்திரிகையில் எழுதுவார்களோ என்ற பயமெல்லாம் எனக்குக் கிடையாது."

**ஷங்கர் - ரஜினி இணைவது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

"தமிழ் சினிமாவுக்கு நிச்சயம் ஒரு மைல்கல்லாக இருக்கும். ஒரு ரசிகனாக நானும் ஆவலோடு எதிர்பார்க்க ஆரம்பித்து விட்டேன்."

**நீண்ட நாள் வெளிப்புற படப்பிடிப்புக்கு போய்விட்டு வீடு திரும்பும்போது சட்டென்று என்ன உணர்வீர்கள்?**

"என் குழந்தைகளின் கண்களில் ஒரு ஏக்கம் தெரியும் பாருங்கள். அய்யோ! நொந்து போய் விடுவேன். அதே ஏக்கம். நான் வளர்க்கும் கிளி, இரண்டு பூனைகள் கண்களிலும் இருக்கும். குழந்தைகள் சகஜமாகி விடுவார்கள். ஆனால் இவை சமாதானமாகி என்னுடன் விளையாட இரண்டு நாட்கள் ஆகி விடும். மனிதனோ, மிருகமோ... அன்பு, அரவணைப்பு, பாசம் இவற்றுக்கு இருக்கிற சக்தி வேறு எதற்குமே இல்லை."

சந்திப்பு : **ஆர்.சி.ஜெயந்தன்**

படங்கள் உதவி : **ஜான்சன்**

As per BIS,
IS:2888-1983.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் சிந்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. சிந்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே சிந்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்

Orchard 8 GCPMSOCN 913/04 TAM

இசைப் பேரரசியாக அனைவருக்கும் தெரிந்த பாடகி எம்.எஸ். சுப்புலட்சுமி, எனக்கும் என் குடும்பத்துக்கும் மட்டும் எம்.எஸ். மாமி. சதாசிவம் மாமாவும் எம்.எஸ். மாமியும் என்னைத் தொட்டிலில் போட்ட நாளன்று வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். மாமி, எனக்காக அன்றைக்கு ஒரு பாட்டுப் பாடியிருக்கிறார்கள்.

என் அப்பா சூரியும் சதாசிவம் மாமாவும் நெருங்கிய நண்பர்கள். அந்தப் பழக்கத்தில் நினைவு தெரிந்த நாளிலிருந்து எம்.எஸ். எனக்கு நல்ல பரிச்சயம். ராதா-ஆனந்தி அப்பொழுது நன்றாக நடனம் ஆடுவார்கள். அவர்களின் நடன நிகழ்ச்சிக்கு எம்.எஸ். பாடுவார்கள். அது போன்ற ஒரு கச்சேரிக்கு நான் இரண்டரை வயதில் சதாசிவம் மாமாவுடன் சென்றதும் அவர் என்னைத் தூக்கி வைத்திருந்ததும், இன்னமும் என் நினைவில் பசுமையாக உள்ளன.

மூன்று வயதிருக்கும்போது, எம்.எஸ் அலங்காரம் பண்ணுவதை அருகிலிருந்து பார்த்திருக்கிறேன். அவர் காதோரம் உள்ள சுருள் முடி ஆடியது, இன்னமும் என் நினைவில் அசைந்தாடிக் கொண்டிருக்கிறது! இரட்டைப் பேட்டு போட்ட பட்டுப்புடைவை, கொண்டையில் ஸ்பெஷலான மல்லிகைப் பூச்சரம், ஜடைபில்லை, பச்சைக்கல் அட்டிகை, பேசரி, நெற்றியில் மூன்று விதமான பொட்டுக்கள்... என உயர்ந்த ரசனையோடு அலங்கரித்துக் கொள்வார். அந்தத் தோற்றத்தில் அவர் மேடையேறி அமர்ந்து, தம்பூரா ஸ்ருதி போடப்பட்டதுமே பக்திப் பரவச நிலை உண்டாகிவிடும். மாமி, பல சமயங்களில் குழந்தையாக மாறி விடுவார்கள்.



# எங்கள்

இசை புதுசு!

# எம்.எஸ்.

## சிவசங்கரி

தலைக்கு நன்றாகக் குளித்து சாம்பிராணி போட்டு மல்லிகைப்பூ வைத்துக் கொள்ள அவருக்கு மிகவும் பிடிக்கும். மருதாணி வைத்துக்கொண்ட மறுநாள் 'சிவந்திருக்கா?' என்று காட்டிக் காட்டி பூரித்துப் போவார். ஓய்வு கிடைத்தால் சமையலறைக்குள் நுழைந்து கீரை ஆய்வார். கறிகாய்களை அழகாக நறுக்கவும் பிடிக்கும். வாசலில் அழகாய் நெளி கோலம் போடுவார். திருவையாறு உற்சவத்தின்போது, ஒருமுறை, தஞ்சாவூரிலுள்ள என் மாமனார் - மாமியார் வீட்டில் தங்கியிருக்கிறார்கள். எம்.எஸ்.க்கு சர்க்கரை நோய் இருந்ததால் அதிகமாகச் சாப்பிட மாட்டார்கள். சுட்ட அரிசி அப்பளம் மாமிக்குக் கொள்ளை இஷ்டம் என்பதால் நாலைந்து வாங்கி வைத்து குழந்தை போல் சாப்பிட்டார்கள்.



அவர் பக்திப் பரவசத்தில் மெய் மறந்து பாடும்போது, யாரும் உருகாமல் இருக்க முடியாது. 'சுவானுபவம்' என்று சமஸ்கிருதத்தில் சொல்வதுபோல், நமக்கு நாமே அனுபவித்துக் கொள்ளும் அற்புதமான தருணங்கள் அவை. என் கணவரை இழந்திருந்த சமயம், 'குறையொன்றுமில்லை மறை மூர்த்தி கண்ணா'வைத்தான் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருந்தேன். மாமி எத்தனையோ பாடல்களைப் பாடினாலும் 'குறையொன்றுமில்லை' கேட்கும்பொழுது மட்டும் என் கண்ணிலிருந்து ஜலம் வரும். அந்தப் பாடலை கச்சேரியில் பாடும்போது கட்டுண்ட நாகம்போல மெய்மறந்து போவார்கள் ரசிகர்கள். சரஸ்வதியே உருவம் எடுத்து வந்த மாதிரியான உணர்வைத் தோற்றுவிப்பார். 'இந்த இசை ராணிக்கு முன்பு பிரதம மந்திரியெல்லாம் சாதாரணம் தானே' என்று அன்றைக்கு பண்டித ஜவஹர்லால் நேருவே மாமியை மெச்சிப் பேசியிருக்கிறாரே!

மாமி, 50 வயதுக்குப் பிறகு சமஸ்கிருதம் பயின்று, பின்னர் சுப்ரபாதம், ஸஹஸ்ரநாமம் எல்லாம் ஒலிப்பதிவு செய்தார். பள்ளி, கல்லூரிகளில் நான் சமஸ்கிருதத்தைப் பயின்றிருந்தாலும், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் கற்றுக்கொண்டது மாமியின் பாடல்களை டேப்பில் கேட்டுத்தான். சமஸ்கிருத பண்டிதர் அளவுக்கு அவர் உச்சரித்ததில் யாருமே குறை சொல்லவில்லையே! சங்கீத வித்வான்களெல்லாம் பிரமாதம் என்று புகழாரம் சூட்டினார்களே!

சமஸ்கிருத சுப்ரபாதத்தை மாமி அண்மையில்தான் தமிழில் பாடினார்கள். மூச்சு விடாமல் அதைப் பாடுவதென்பது அத்தனை சுலபமா என்ன! எழுதி வைத்து அதைப் பாடிவிட முடியாது. மனப்பாடம்தான் ஒரே வழி. அந்த வயதில் அவர் காட்டிய சிரத்தை, ஈடுபாடு எங்கும் பார்க்க முடியாது.

**மா**மியின் அழகு பற்றியோ, பாட்டுத் திறமை பற்றியோ யாருக்காவது

இரண்டாவது கருத்து இருக்குமா என்று தெரியவில்லை. திரௌபதி, சீதை என்று புராண காலத்தில் பதிவிரதைகள் பற்றிப் படித்திருக்கிறோம். ஆனால் நிகழ்காலத்தில் எம்.எஸ் போன்ற ஒரு பதிவிரதையை நான் பார்த்ததேயில்லை.

தனக்குக் கிடைத்த பேர், புகழ், அனைத்தும் மாமாவினால் கிடைத்தது என்பதால், அவர்மீது கொண்டிருந்த மரியாதை, அன்பு, பதிபக்தி அனைத்தையும் இலேசில் இன்னொருவரிடம் பார்க்க முடியாது. மாமாவும் மாமியின் தீவிர ரசிகர். மேடையில் மாமி சிரத்தையுடன் பாடிக்கொண்டிருப்பதை, 'என் மனைவி மாதிரி உண்டா?' என்கிற தோரணையில்தான் முதல் வரிசையில் அமர்ந்து பெருமிதத்துடன் ரசிப்பார். அதேசமயம், மாமா 'போதும்' என்று சொன்னால் போதும், மாமியும் அந்த நொடியில் கச்சேரியை நிறுத்தி விடுவார்.

'Aging gracefully' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். அதாவது வயதானாலும் மிகவும் நளினமாக வயசாக வேண்டுமாம். அப்படி நான் பார்த்த ஒரே மனுஷி எம்.எஸ். மாமிதான். 25 வயதின்போது எத்தனை அழகாக இருந்தார்களோ, அதே அழகோடுதான் வயதானபோதும் ஜொலித்துக்கொண்டிருந்தார்.

அனைவரும் அறிந்த ஓர் எழுத்தாளராக நான் வளர்ந்ததில் மாமிக்கு எல்லையில்லா சந்தோஷம். "என்ன, நீ பெரிய எழுத்தாளராயிட்டேன்னு நினைச்சுக்காதே. உன்னைத் தொட்டில்ல போடும்போது நான் வந்து பாடியிருக்கேனாக்கும். எங்களுக்கெல்லாம் நீ எப்பவும் குழந்தைதான்" என்று என்னிடம் சந்தோஷம் பொங்கப் பேசுவார்.

அவர் படுத்த படுக்கையாக இருந்த சமயம், நான் அவரைப் பார்க்கச் சென்றிருந்தேன். என்னை உற்றுப் பார்த்தவர், "கழுத்துல வெறும் பவளமாலை மட்டும் போட்டுக்காதே... கூடவே தங்கச் செயினும் போட்டுக்கோ" என்றார். பின்னர் என்னைப் பாடச் சொல்ல, நானும் பாடினேன். உடனே என் முக வாய்க்கட்டையைக் கைகளால் வழித்து, 'விட்றாதே பாட்டை விட்றாதே' என்றபடி தலையில் கைவைத்து ஆசீர்வாதம் பண்ணினார்.

மாமி இன்னும் ஐம்பது வருடங்கள் கூடுதலாக வாழ்ந்திருக்கலாமோ, இன்னும் அதிகமாகப் பாடியிருக்கலாமோ என்கிற ஏக்கம் ஒரு பக்கம் இருந்தாலும் இதுவரைக்கும் அவர் பாடிய பாடல்கள், ஸ்லோகங்கள் எல்லாம் கேட்கவே ஒரு ஜன்மம் போதாதே!



(அடுத்த வாரம்:
விக்கு விநாயகராம் எழுதுகிறார்)


வாசகர்களின் எண்ணிக்கை
அதிகரித்த
ஒரே தமிழ் நாளிதழ்
அதிக வாசகர்கள்
படித்த
இணைப்புகள்
இளைஞர்மணி,
வெள்ளிமணி
தினமணி
செய்தியில் முழுமை; சொல்வதில் புதுமை!
Source: NRS 2005



# "சி.எம். கூப்பிடலை!"

## - முதல் மாணவி வருத்தம்!

+2 தேர்வில் தமிழ்நாட்டிலேயே அதிக மதிப்பெண். மீடியாவின் வழியாக அதிக வெளிச்சம். ஒருவழியாக ஆரவார மடங்கி சமர்த்தாக அண்ணா பல்கலைக் கழகத்தில் பி.இ. மெக்கானிக்கல் படித்து வருகிறார் சுஜனா.

'என்ன நீங்க மெடிசன் படிக்கலையா?' என்றால், பலமாகத் தலையை ஆட்டுகிறார். " நான் என்ன படிக்கணும்னு பல பேர்கிட்ட விவாதிச்சேன். ஏரோனாட்டிக்கல் அல்லது மெக்கானிக்கல் ரெண்டும்தான் என் கடைசி சாய்ஸா இருந்தது. அண்ணா யூனிவர்சிட்டியில மெக்கானிக்கல் படிச்ச ஒரு அக்கா, கிளாஸ் டாப்பரா வந்ததா செய்தி கிடைச்சுது. உடனே மெக்கானிக்கலுக்குத் தாவிட்டேன்" என்கிறார்.

மாநிலத்தின் முதல் மாணவியாக வந்தபோதிலும் அரசின் எந்த உதவியும் சுஜனாவுக்குக் கிடைக்கவில்லையாம். இவர் +2வில் மொழிப் பாடமாக தமிழுக்கு பதில் சமஸ்கிருதம் எடுத்துப் படித்ததுதான் காரணமாம்.

"நான் தமிழ்ப் பொண்ணுதான். சி.பி.எஸ்.சி. சிலபஸ்ல பத்தாவது படிக்கும்போது தமிழ் படிச்சு ஸ்டேட் ரேங்க் கூட வாங்கியிருக்கேன். +2ல மத்த பாடங்கள்ல கவனம் செலுத்தறதுக்காகத்தான் தமிழ் படிக்கலை. தமிழ் எடுத்து முதலிடம் வந்த நாமக்கல் சத்யாவைக் கூப்பிட்டு பாராட்டி பண உதவியும் செஞ்சிருக்காங்க நம்ம சி.எம். ஆனா என்னைத்தான் இதுவரைக்கும் கூப்பிடவே இல்ல" எனும்பொழுது சுஜனாவின் குரலில் ஏக வருத்தம். இருப்பினும் தனியார் அமைப்புகள் சில இவருக்குப் பாராட்டும் பண உதவியும் செய்துள்ளன.

சரி, நுழைவுத் தேர்வு சர்ச்சை பற்றி மாநிலத்தின் முதல் மாணவி என்ன சொல்கிறார்?

"நுழைவுத்தேர்வில் எப்பொழுதுமே கடினமான கேள்விகள்தான் கேட்கப்படுது. இதுல ரொம்ப அறுவடை செய்றது சிட்டி ஸ்டூடண்ட்ஸ்தான். இவங்களுக்குக் கிடைக்கிற பலமான கோச்சிங்னால எல்லாமே சாத்தியமாகுது. கிராமத்து மாணவர்கள்தான் பாவம்! நுழைவுத் தேர்வை நினைச்சு பயந்து அவங்க படற கஷ்டம் கொஞ்சம் நஞ்சமல்ல. இந்த விஷயத்துல ஏதாச்சும் மாற்றம் கொண்டுவந்து, எல்லோருக்கும் சமமா அமைஞ்சா நல்லதுதான்" என்கிற சுஜனாவின் கனவு எம்.எஸ் படிப்பது.

- பப்பி

படம்: ஸ்ரீஹரி




## பூகம்பத்தைக் காட்டிலும் கொடூரம்!

**பா**க். ஆக்கிரமித்த காஷ்மீரில் நிகழ்ந்த பூகம்பம் மிகக் கொடூரமானதுதான். அதைக் காட்டிலும் கொடூரம் ஒன்று உண்டு எனில், அந்தத் துயரச் சூழலிலும் அரசியல் ஜம்பங்களும் பாரம்பரிய விரோதமும் பாதகமிக்க பயங்கர வாதமும் தலைவிரித்தாடுவதுதான்.

பாகிஸ்தானுக்கும் பாக். ஆக்கிரமிப்பு காஷ்மீருக்கும் உடனடியாக உதவ இந்தியா முன்வந்த போதும் முஷாரஃப் அந்த உதவியை ஏற்க மீன - மேஷம் பார்த்துக் கொண் டிருந்தார். ஒரு வழியாக உதவியை ஏற்க ஒப்புக்கொண்ட பிறகு அபத்தமான நிபந்தனைகளை முன் வைத்தார் :

'இந்திய ஹெலிகாப்டர்கள் வரட்டும்; ஆனால் அவற்றை இந்திய விமானப் படையினர் செலுத்தக்கூடாது' என்றார்.

எல்லைக் கட்டுப்பாட்டுக் கோட்டைக் கடந்து சென்று இந்தியர்கள் உதவுவதை முதலில் முஷாரஃப் ஏற்கவில்லை. மீட்புப் பணிகளில் சுணக்கம் காரணமாக, பூகம்பம் நிகழ்ந்து பத்து நாட்களுக்குப் பிறகே இதற்குச் சம்மதிக்க அவர் மனம் இரங்கியது! அவ்வாறு சம்மதித்த பிறகும், ராணுவத்தினர் இந்தக் கட்டுப்பாட்டுக் கோட்டைத் தாண்டி வரலாகாது என்று



கல்கி



2005 அக்டோபர் 30
பார்த்திப ஐப்பசி 13
மலர் : 64
இதழ் : 13




நிபந்தனை.

மிகக் கடுமையான மலைப் பிரதேச நிலப்பரப்பில் ஒரு பூகம்பம் நிகழ்ந்த கையோடு குளிரும் மழையும் வாட்டுகையில், சராசரி மக்களாலும் அயல்நாட்டு - உள்நாட்டு சேவை அமைப்பினராலும் போய் சேவை செய்ய முடியுமா! இத்தகைய தருணங்களில் மீட்புப் பணிகளில் ஈடுபட சிறப்புப் பயிற்சி பெற்ற ராணுவத்தினரால்தான் முடியும். அந்த உதவியை மறுதலித்ததன் மூலம் முஷாரஃப், பாக். ஆக்கிரமிப்பு காஷ்மீர் மக்களுக்கு இழைத்துள்ள அநீதி சொல்லி மாளாதது!

இயற்கைச் சீற்றங்களும் கொடூரங்களும் இந்தியா - பாகிஸ்தான் என்று வேறுபடுத்திப் பார்ப்பதில்லை ; எல்லா தரப்பு மக்களையும் ஒரே மாதிரிதான் அவை தாக்குகின்றன ; பாதிக்கின்றன. துயரும் துன்பமும் நிறைந்த இச்சூழலில் நிபந்தனைகளற்ற ஆதரவு மட்டுமே இம்மக்களுக்குத் தெம்பும் துணிவும் தர முடியும். அத்தகைய உதவியை உடனடியாக அவர்கள் பெறுவதற்கு வழிசெய்யாமல் நீண்ட நாட்களுக்கு அவர்களைத் துன்பத்தில் உழலவிட்டுவிட்டு, பிறகு நிபந்தனைகளுக்குட்பட்ட உதவியை அரை மனத்துடன் அனுமதித்தால், அவர்களுடைய உள்ளங்கள் என்ன பாடுபடும்? உற்றாரை இழந்த துயரும் உடல் ரீதியான துன்பங்களும் போதாதென்று முற்றிலும் பாதுகாப்பற்ற ஓர் உணர்வுத் தளத்தில் அவர்களை நிறுத்துவதென்பது மன்னிக்க முடியாத செயல்.

முஷாரஃப் யோசித்து, இந்திய உதவியை அரை மனத்துடன் ஏற்கும் முன்னரே, எல்லைப் பகுதியிலிருந்த பயங்கரவாத அமைப்புகள் உதவி வழங்குவதில் ஈடுபட ஆரம்பித்தன. ஒரு பக்கம் பாக்- ஆக்கிரமிப்பு காஷ்மீர்ப் பகுதி மக்களின் நம்பிக்கையைப் பெற்றபடி, மறுபக்கம் தளர்த்தப்பட்ட எல்லைக் கட்டுப்பாட்டுக் கோட்டைக்




கடந்து இந்தியப் பகுதிக்குள் முன்னிலும் அதிகமாக ஊடுருவவும் ஆரம்பித்து விட்டனர். சமீபத்திய பூகம்பத்தின் விளைவாக இந்த பயங்கரவாத அமைப்புகள் சிதைந்து போயிருக்கக்கூடும் என்கிற அனுமானம் தவறாகிவிட்டது. ஜம்மு - காஷ்மீர் மாநில கல்வி அமைச்சர் லோன், பயங்கரவாதிகளின் வன்முறைக்குப் பரிதாபமாக பலியாகியிருக்கிறார். அம்மாநில மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் தாரிகாமி மயிரிழையில் உயிர் தப்பியிருக்கிறார்.

எல்லைக் கட்டுப்பாட்டுக் கோட்டைத் தளர்த்திய பாகிஸ்தான், அங்கு இந்திய ராணுவ நடமாட்டத்தை அனுமதிக்க மறுத்திருப்பது, இந்தியப் பாதுகாப்புக்குப் பெரிய அச்சுறுத்தலை ஏற்படுத்தியுள்ளது. மனிதாபிமான நோக்கில் இந்த நிபந்தனைக்கு உட்பட்டுள்ள இந்தியா, எல்லைக்கோட்டுப் பகுதியில் தொலைபேசி / தொலைதொடர்பு வசதிகளையும் உடனடியாகச் செய்து தந்துள்ளது. நல்லெண்ண நோக்கில் செய்யப் படும் இக்காரியங்கள் பாதுகாப்பை மேலும் சவால்களுக்குட்படுத்தும்.

பூகம்ப துயரத்தைத் தொடர்ந்து இந்தோ-பாக். வேறுபாடுகள் தகர்ந்து போய், இரு இராணுவங்களும் இணைந்து, பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவ வழி பிறக்கும் என உலகம் எதிர்பார்த்தது. ஆனால், முஷாரஃப் அதற்கு முட்டுக்கட்டை போட்டு காரியத்தைக் கெடுத்துவிட்டார். கைமிஞ்சிப் போன பயங்கரவாதப் பிரச்னைக்கு முடிவு கட்டும் ஒரு நல்வாய்ப்பையும் அவர் இழந்துவிட்டார்.

இப்போதும் மோசம் போய்விடவில்லை. காஷ்மீர் மக்களின் உணர்வுகளை மதித்து இரு தேச ராணுவங்களின் சேவையை (பராக்கிரமத்தை அல்ல!) அவர்களுக்கு முழு மனத்தோடு அளிக்க இரு அரசுகளும் ஒப்புக்கொள்ளட்டும்... காஷ்மீர் பிரச்னையின் நிரந்தரத் தீர்வுக்கான ஆரம்பமாக அந்தச் செய்கை அமையும். ●

**தீபாவளிக்குப் புதுசா, ஃப்ரெஷ்ஷா அயிட்டம்ஸ் பண்ண நினைக்கிறவங்களுக்குச் சமையல் கலைஞர் சாந்தி பலராமன் தரும் சூப்பர் டிஷ்ஷஸ்!**

# புதுசா சாப்பிடுங்க!

## மோதிர முறுக்கு

**தேவையான பொருட்கள்:** அரிசி மாவு - 2 கப், எள்ளு - ½ டீஸ்பூன், சீரகம் ½ டீஸ்பூன், ஓமம் ½ டீஸ்பூன், மிளகாய் ½ டீஸ்பூன், உப்பு - தேவையான அளவு, எண்ணெய் பொரிப்பதற்கு.

**செய்முறை:** 2 கப் தண்ணீரில் உப்பு, ஓமம், எள்ளு, சீரகம் ஆகியவற்றைக் கலந்து கொதிக்க வைக்கவும். இதில் அரிசிமாவைக் கொட்டி கிளறவும். மாவு வெந்ததும் நன்றாகப் பிசைந்து சிறிய நெல்லிக்காய் அளவுகளில் உருண்டைகளாக உருட்டவும். இதை நீளமாக உருட்டி இரு முனைகளையும் இணைத்து (மோதிரம் போல) வட்டமாக ஒட்டவும். ஒரு கடாயில் எண்ணெயைச் சூடாக்கி இந்த மோதிரங்களைப் பொன்னிறமாகப் பொரித்து எடுக்கவும்.



## சந்திரகலா

**தேவையான பொருட்கள்:** மைதா 2கப், சமையல் சோடா ஒரு சிட்டிகை, உப்பு ஒரு சிட்டிகை, நெய் 1½ டேபிள் ஸ்பூன், சர்க்கரை இல்லாத கோவா 200 கிராம், பொடித்த சர்க்கரை 100 கிராம், ஏலக்காய்த் தூள் 1 டீஸ்பூன், பொடித்த முந்திரிப் பருப்பு 1 டேபிள்ஸ்பூன், சர்க்கரை 2 கப் (பாகு வைப்பதற்கு), எண்ணெய் பொரிப்பதற்கு.

**செய்முறை:** நெய்யை லேசாக இளக்கி, அதில் சமையல் சோடாவை சேர்த்து உள்ளங்கையில் அழுத்தி பொர பொரவென்று வரும்வரை தேய்க்கவும். இவை நன்கு கலந்ததும் மைதாவைச் சேர்த்து தேவையான தண்ணீர் தெளித்து மிருதுவான மாவாகப் பிசைந்து 1 மணி நேரம் ஊற வைக்கவும்.

**பூரணத்துக்கு:** பால்கோவாவை உதிர்த்து ஏலக்காய், சர்க்கரை, முந்திரிப் பருப்பு சேர்த்து கலந்து வைக்கவும். ஊறிய மாவை சிறிய உருண்டைகளாக உருட்டி



# ஆரஞ்சு அல்வா (20 துண்டுகள்)

**தேவையான பொருட்கள்:**

சம்பா கோதுமை 1 கப் 150 கிராம், சர்க்கரை 1½ கப் - 2 கப், ஆரஞ்சு நிறம் சில துளிகள், நெய் 4 டீஸ்பூன் முந்திரி, பருப்பு வகைகள் - அலங்கரிக்க.

**செய்முறை:**

கோதுமையைச் சுத்தம் செய்து குறைந்தது 4 மணி நேரம் ஊற வைக்கவும். ஊறிய கோதுமையை மிக்ஸியில் அரைத்து இரண்டு தடவையாகப் பால் பிழிந்து வடிகட்டி வைக்கவும். இந்தப் பாலை அசையாமல் ஒரு நாள் இரவு முழுவதும் (குறைந்தது 8 மணி நேரமாவது) தெளிய வைக்கவும். மறுநாள் காலையில் மேலே தெளிந்து வந்திருக்கும் தண்ணீரை நன்றாக இறுத்து விடவும். அடியில் மீதமிருக்கும் கெட்டியான பால் விழுதை அளந்து கொள்ளவும். ஒரு கப் அளவுக்கு 1½ கப் சர்க்கரை என்ற விகிதத்தில் சர்க்கரை கலந்து கொள்ளவும். தேவையான எஸன்ஸ், நிறம் இவற்றையும் சேர்க்கவும்.



* சாந்தி பலராமன்

இந்தக் கலவையை பிரஷர் குக்கரில் தண்ணீர் சேர்க்காமல் வேக வைக்கவும். ஒரு விசில் வந்தவுடன் அடுப்பைக் குறைத்து 45 நிமிடங்கள் குறைந்த தீயில் வேக வைக்கவும். குக்கர் ஆறியவுடன் திறந்து பார்த்து, தேவையானால் குறைந்த தீயில் வேக வைக்கவும். வேகவைத்த கெட்டியான விழுதை ஒரு கரண்டியால் நன்றாக மசித்துக்கொள்ளவும். ஒரு கடாயை சூடாக்கி 4 டீஸ்பூன் நெய்விட்டு முந்திரி பருப்பு வகைகளை வறுத்து, அதில் வெந்த விழுதை போட்டுக் கிளறவும்.



அல்வா கடாயின் பக்கங்களில் ஒட்டாமல் வரும்வரை, கைவிடாமல் கிளறி நன்றாக வேக விடவும். ஏற்கெனவே நெய் தடவிய ஒரு தட்டில் அல்வாவைப் போட்டு சமமாகப் பரப்பவும். அல்வா சூடாக இருக்கும்போதே ஒரு கத்தியால் சதுரங்களாக வெட்டி வைக்கவும். வறுத்த பருப்பு வகைகளால் அலங்கரிக்கவும். கோதுமை அல்வா பல நாட்கள் வரை கெடாமல் இருக்கும். ஃபிரிட்ஜில் வைக்க வேண்டிய அவசியம் இல்லை.

சிறிய பூரிகளாக இடவும். ஒரு பூரியின் நடுவில் 1 டேபிள் ஸ்பூன் பூரணத்தைப் பரப்பவும்.

பூரணம் வைத்த பூரியை அரைச் சந்திரனைப் போல மூடி, ஓரங்களை ஈரம் தடவி நன்றாக ஒட்டவும். ஒட்டிய ஓரங்களை பிரியாதபடி உருட்டி மடித்து விடவும்.ஒரு கடாயில் எண்ணெயை மிதமாக சூடாக்கி, செய்து வைத்த சந்திரகலாவைப் பொன்னிறமாகப் பொரித்து வைக்கவும். இதற்ிடையில் ஒரு அடிகனமான பாத்திரத்தில் சர்க்கரையை ¾ கப் தண்ணீரில் கரையவிட்டுக் கம்பிப் பதமாக பாகு காய்ச்சவும்.

அடுப்பை அணைத்து பாகு சூடாக இருக்கும்போதே சந்திரகலாவைப் போட்டு எடுக்கவும். ஒரு தட்டியில் அடுக்கி பாதாம்/ குங்குமப்பூ இவற்றைத் தூவி அலங்கரிக்கவும்.



இங்கு தயாரிக்கப்படும் இனிப்புகள் லெவுலோஸ் எனும் இயற்கை மாற்றுச் சர்க்கரை கொண்டு செய்யப்படுகின்றன. இதைச் செரிப்பதற்கு இன்சுலின் தேவையில்லை. ஆகையால் டயபடீஸ் உள்ளவர்களும் இதை ஆனந்தமாகச் சாப்பிடலாம். லெவுலோஸை பிரபல நீரிழிவு நோய் நிபுணர் டாக்டர் வி. சேஷையாவின் 'Diabetes care & Research Institute' நிறுவனம் தீவிரமாக ஆராய்ச்சி செய்து, இதை சர்க்கரை நோய் உள்ளவர்களும் தாராளமாகச் சாப்பிடலாம் என்று சான்றிதழ் அளித்துள்ளது. இதன்மூலம் டயபடீஸ் பேஷண்ட்டுகளின் நீண்டநாள் கனவு நனவாகியுள்ளது.

# டயபடீஸா..? இதோ Dezire ஸ்வீட்ஸ்!

தீபாவளியின் ஸ்பெஷலே ஸ்வீட்ஸ்தான். விதவிதமான இனிப்பு வகைகளை எல்லோருமே ஒருபிடி பிடித்துக் கொண்டிருக்க, சர்க்கரை நோயாளிகளின் பாடுதான் திண்டாட்டம். ஆசைப்பட்டதைச் சாப்பிட முடியாமல், நாக்கில் நீர் ஊற அமர்ந்திருப்பர். ஆனால், அவர்கள் இனி பயமின்றி இனிப்புக்கு 'எஸ்' சொல்லலாம். ஆம்... நீரிழிவு நோயாளிகளுக்காகவே சென்னை தி.நகரில் பிரத்யேகமாகத் திறக்கப்பட்டிருக்கிறது 'டயபடீஸ் டிஸையர்' இனிப்பகம்.

சரி, இங்கு என்னென்ன இனிப்பு வகைகள் கிடைக்கின்றன? ரசகுல்லா, ரசமலாய், குலாப்ஜாமூன், ஜாங்கிரி, பாதுஷா, அல்வா வகைகள், மில்க் பேடா, பாதாம் கீர்... என நீண்டு கொண்டே போகிறது பட்டியல்.

நீரிழிவு நோயாளிகளின் நலன் கருதி பிரத்யேகமாகச் செயல்படும் இந்த இனிப்பகம், தி.நகர் வாணிமஹால் அருகிலுள்ள ஆங்கூர் பிளாசாவில் செயல்படுகிறது. டோர் டெலிவரியும் செய்யப்படுகிறது. தீபாவளி நன்னாளில் சர்க்கரை நோயாளிகளுக்கு உண்மையிலேயே இது இனிப்பான செய்திதான். தொலைபேசி: *52121415.*

- திவ்யா

புதிய தொடர் ஆரம்பம்!



# விஜயகாந்த்

**உ**ப்பின் குணம் சுவைத்தால் தெரியும். நெருப்பின் தன்மை தொட்டால் தெரியும். வாழ்க்கையின் தன்மை என்ன... அதை வாழ்ந்து பார்த்தால் தான் தெரியும்.

வாழ்க்கையின் ஆரம்பம் நம் கையில் இல்லை. அதன் முடிவு நம்மிடம் உள்ளது.

என் குழந்தைப் பருவம் என் பெற்றோர் விருப்பப்படி நடந்தது. என் வாலிபப் பருவம், என் விருப்பப்படி நடந்தது. அதன் பிறகுதான் வாழ்க்கை ஒரு போர்க்களம் என்று தெரிந்தது.

மனிதர்கள் வாழ்க்கையை வாழ்ந்துதான் கற்றுக் கொள்கிறார்கள். அதன் பிறகுதான் வாழ்க்கையில் (வாழும் முறையில்) திட்டமிடல் வருகிறது.

*'வாழ நினைத்தால் வாழலாம்*
*வழியாயில்லை பூமியில்*
*ஆழக் கடலும் சோலை யாகும்*
*ஆசையிருந்தால் நீந்தி வா...'*

என்றார் கண்ணதாசன்.

கடைசி வரியை மறுபடியும் வாசித்துப் பாருங்கள் 'ஆசை இருந்தால் நீந்தி வா...'

நீந்தத் தெரிந்தவனுக்குத்தான் கடலின் ஆழம் தெரியும். வாழத் தெரிந்தவனுக்குத்தான் வாழ்க்கை பிடிபடும்.

வாழ்க்கையை அதன் போக்கில் போய் வாழ்ந்துவிட்டுப் போகிறவர்கள் சாதாரண மனிதர்கள். வாழ்க்கையைத் தன் போக்கில் அமைத்துக் கொள்கிறவர்கள் சாதனையாளர்கள், வாழ்க்கையில் ஜெயித்தவர்கள்.

இதில் நான் எப்படி...?

மதுரையில் ரைஸ் மில் வைத்து உழைத்துக் கொண்டிருந்த விஜயராஜ், இன்று



# 1

இந்த அளவுக்கு உயர்ந்தது எப்படி...?

உங்களுக்கு மட்டுமல்ல; எனக்கும்தான் என் வாழ்க்கையில் அன்று முதல் இன்று வரை நடந்தவைகளை நினைத்துப் பார்க்க ஆசை.

ஒரு பக்கம் படப்பிடிப்பு, இன்னொரு பக்கம் நடிகர் சங்கப் பொறுப்பு, மறுபுறம் கட்சி வேலைகள், இத்தனை பரபரப்புகளுக்கு

# பேசுகிறேன்!

நடுவில் உங்களோடு பேசுகிறேன். போர்க்களத்தின் நடுவே புல்லாங்குழல் வாசிப்பது போல்.

மகாத்மா காந்தி 'சத்தியசோதனை'யிலும், கண்ணதாசன் 'வனவாச'த்திலும் தங்கள் வாழ்வில் நடந்தவைகளை மறைக்காமல் பேசியிருப்பார்கள். அப்படி வெளிப்படையாகப் பேசுவதுதான் எனக்கும் பிடிக்கும், நானும் அப்படித்

# விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

## என் தம்பிகளில் நன்முத்து...

"**ந**ண்பர் எம்.ஜி.ஆருக்கு என்று சண்டையில் தனி பாணி உண்டு. அதைப்போன்று விஜயகாந்தும் சண்டைக் காட்சிகளில் கவனம் செலுத்தி நன்றாக நடிக்கிறார்.

விஜயகாந்தை எப்படியாவது தி.மு.க.வில் சேர்த்துவிட வேண்டும் என்று நீண்ட நாட்களாக எஸ்.எஸ்.சந்திரன் முயற்சி செய்து வருகிறார். இன்னொரு பக்கம் தம்பிக்குப் பின்னால் இப்ராஹிம் ராவுத்தர் இருக்கிறார். அதனால்தான் தம்பியை தி.மு.க.வுக்குள் இழுக்க முடியவில்லை.

இப்ராஹிம் தேசியவாதி, விஜயகாந்த் தமிழ் மொழியின் மீது பற்றுள்ளவர். தேசியமும் வெற்றி பெற வேண்டும்; மொழியும் வெற்றி பெற வேண்டும். தேசியப் பற்று நாட்டைக் காப்பாற்றவும், மொழிப்பற்று தமிழைக் காப்பாற்றவும் வெற்றி பெறட்டும்.

தமிழ் விஜயகாந்த், தமிழை உயிரென மதிக்கிறார். அவர் எங்கிருந்தாலும் தமிழனாக... தமிழுணர்வு மிக்கவராக இருப்பார், தமிழனுக்காக வாழ்வார். எனது தம்பிகளில் நன்முத்து விஜயகாந்த்."

*- 1989ம் ஆண்டு விஜயகாந்தின் இலவச மருத்துவமனையைத் திறந்து வைத்து அன்றைய முதல்வர் கலைஞர் பேசியது.*



தான்.

ஒரு சாதாரண ஏழை விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர் எங்கப்பா அழகர்சாமி. வாழ்க்கையில் ரொம்பப் போராடி கஷ்டப்பட்டு உழைத்து முன்னுக்கு வந்தவர்.

அருப்புக்கோட்டை பக்கத்தில் இருக்கிற ராமானுஜபுரம்தான் எங்கப்பாவுக்கு சொந்த ஊர். சின்ன வயதிலேயே மதுரைக்கு வந்துவிட்டாராம். மதுரையில் ஆரம்ப காலத்தில் எங்கப்பா இருந்த இடங்களையும், அவர் வேலை பார்த்த இடங்களையும் என்னிடம் காட்டியிருக்கிறார்.

காங்கேயநத்தத்தில் இருக்கிற எங்க சாமி 'வீரசின்னம்மா' தான் எங்கள் குலதெய்வம். எனக்கு எல்லாமே இந்த ஆத்தாதான். என் மனசுக்கு நிம்மதி, சந்தோஷம் எல்லாம் தரக்கூடியது வீர சின்னம்மா சன்னதி.

எங்க குடும்பத்தில் எந்த விசேஷம் என்றாலும் எங்கப்பா, எங்கம்மா முதலில் போற இடம் எங்க சாமி வீரசின்னம்மா கோயில்தான்.

சின்ன வயதில் அம்மா, அப்பாகூட ரெட்டை மாட்டு வண்டியில் பயணம் செய்து வீரசின்னம்மாவை தரிசிக்க வந்திருக்கிறோம்.

என் திருமணத்துக்குப் பிறகு மனைவியுடன் வீரசின்னம்மாவின் ஆசி பெறப் போய் வந்தேன். சமீபத்தில் புதிய அரசியல் கட்சி துவக்குமுன் குடும்பத்துடன் சென்று எங்கள் குலதெய்வத்தின் ஆசி பெற்று வந்தேன்.

எங்கப்பாவுக்கு இரண்டு மனைவிகள். எங்கம்மா ஆண்

டாள் மூத்த தாரம். அவர்களுக்கு நாலு பிள்ளைகள். அக்கா விஜயலட்சுமி, அண்ணன் நாகராஜ், நான் (விஜயராஜ்), எனக்கு அடுத்து தங்கை திருமலாதேவி.

தங்கை திருமலாதேவி பிறந்து சுமார் ஒரு மாதத்தில் அம்மா இறந்துவிட்டார். அப்போது எனக்கு ஒரு வயது. அம்மாவின் இழப்பைப் பற்றி ஒன்றும் தெரியாத வயசு. அம்மா கண்மூடித்



• இன்னொரு அம்மா!

**'நிலாவை தொலைவிலிருந்து பார்த்த எனக்கு, அந்த நிலாவே பக்கத்தில் வந்த ஆனந்தம்!'**

தூங்கிக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்த குழந்தைப் பருவம் அது. பிறகுதான் அம்மாவின் இழப்பு தெரிய ஆரம்பித்தது.

அம்மா என்றால் எல்லோர்க்கும் உயிர். என்னுடைய சின்ன வயதிலேயே அம்மாவை இழந்தது மிகப்பெரிய சோகம்.

அப்போதெல்லாம் என் வயசுப் பசங்க தங்களோட அம்மாவுடன் ஸ்கூலுக்குப் போறதையும், அம்மாவுடன் விளையாடிக் கொண்டிருப்பதையும் பார்க்கும்போது எனக்குள் ஒரு சோகம் மீனாட்சியம்மன் கோபுரம் உயரத்துக்குப் பீறிடும்.

தாய்ப்பாசம் சம்பந்தமான படங்களைப் பார்க்கும்போதும், மகனின் வெற்றியைக் கண்டு பூரிக்கும் தாய், ஆனந்தக் கண்ணீர் சிந்தும் காட்சியை சினிமாவில் பார்க்கும்போதும் என்னை அறியாமலே அழுது விடுவேன்.

நான் வாழ்க்கையில் போராடி சினிமாவில் நடித்து வெளியான ஒரு சில படங்களை என் தந்தை பார்த்துப் பாராட்டியிருக்கிறார். ஆனாலும் எனது இந்த வளர்ச்சியின் ஒரு சிறிய பகுதியைக் கூட பார்க்க என் தெய்வத்தாய் உயிரோடு இல்லையே என்ற வலியும் வருத்தமும் நிறையவே எனக்குள் இருக்கிறது.

தாயன்பை தூரத்திலிருந்தும்... அக்கம் பக்கத்திலிருந்தும் பார்த்துப் பார்த்து உருகியிருக்கிறேன்.

இப்போது அந்தத் தாயன்பை நானே பெறும் வாய்ப்பை என் மனைவி மூலம் ஆண்டவன் கொடுத்திருக்கிறான். நிலாவை தொலைவிலிருந்து ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்த எனக்கு, அந்த நிலாவே பக்கத்தில் வந்து உட்கார்ந்த மாதிரி ஒரு ஆனந்தம். இதைத்தான் தாய்க்குப் பின் தாரம் என்கிறார்களோ! என்னைப் பொறுத்தவரை என் மனைவி எனது இன்னொரு அம்மா!

சின்ன வயதில் என்னை 'ஊமைப் பிள்ளையார்' என்று செல்லமாகக் கூப்பிடுவார்கள். அப்போதெல்லாம் ரொம்ப சேட்டை பண்ணுவேன். அப்படி நான் பண்ணிய ஒரு சேட்டை அப்பாவைக் கடுமையாகக் கோபம் கொள்ள வைத்தது...

**(அடுத்த வாரம் சொல்கிறேன்)**

# விலங்குகள்

நிறைய நோயாளிகள்தான் வந்திருந்தனர். அனுஷா அதிக நேரம் காத்திருக்கும்படி ஆனது. 'வேறு வழி இல்லை. இந்த காத்திருத்தல் மிக அவசியமான ஒன்று'.

மல்லிகாவுக்குப் பதிலாக நியமிக்கப்பட்டிருந்த தாரா என்ற அந்தப் புதிய பெண்ணுக்கு சாமர்த்தியம் போதவில்லை.

"டாக்டரைப் பார்க்க இன்னும் எவ்வளவு நேரம் ஆகும்?" என்று ஒருவர் கேட்க, "எனக்கு என்ன ஜோசியமா தெரியும்?" என்று பதிலளித்தாள்.

இதைக் கேட்ட வேறொருவர் "என்ன இப்படி பதில் சொல்றீங்க?" என்று கேட்க, "பின்னே என்ன சார், ஒருத்தருக்கு அஞ்சு நிமிஷம் ஆகும். ஒருத்தருக்கு அரைமணி நேரம் ஆகும். அப்படி இருக்க, நான் எப்படி இவங்க கேள்விக்கு பதில் சொல்ல முடியும்?" என்றாள் விறைப்பாக.

அனுஷா அவளை அருகில் அழைத்தாள். "துல்லியமாகச் சொல்ல முடியாதுதான். ஆனாலும் அவங்களுக்கு முன்னாலே வந்தவங்களைக் கணக்கிட்டு தோராயமாக ஒரு நேரத்தைச் சொல்லி இருக்கலாமே" என்றாள்.

தாரா இதற்கு முன் சந்தித்திராத அனுஷாவை முறைத்துப் பார்த்தாள். "நீங்க என்ன அவருக்கு வக்காலத்து? இப்ப உங்க உறவுக்காரங்க யாருக்காவது மாரடைப்புன்னு அழைச்சுக்கிட்டு வந்தா, உடனடியாக அதை டாக்டர் கவனிப்பாரா? இல்ல 'உங்களுக்கு முன்னால பதினைஞ்சு பேர் இருக்காங்க'ன்னு சொல்லி வரிசைல நிக்க வைப்பாரா?"

தாராவின் கேள்விகளில் தர்க்கரீதியான நியாயம் இருந்தது. ஆனால், சூழல்களை அவள் கையாண்ட விதம் மனிதர்களின் சைக்காலஜியை



## உளவியல் தொடர்கதை

## 9

அவள் அறிந்து கொள்ளவில்லை அல்லது அதற்கு மதிப்பு கொடுக்கவில்லை என்றே எண்ணத் தோன்றியது.

இதற்கு முன் அவள் வேலையைச் செய்து கொண்டிருந்த மல்லிகாவின் நினைவு வந்தது. இரண்டு நாட்களுக்கு முன் அவள் வீட்டிற்குள் நுழைந்ததும்தான்.





“**நா**ன் இறந்த பிறகு என் தோலைப் பறையாகச் செய்து சிறுவர்கள் அடித்து மகிழ்வார்கள்” என்று மாடு ஒன்று வாய்விட்டுச் சொன்னது.

“இதென்ன பிரமாதம்? நான் இறந்ததும் என் தோல் பெண்களின் நாகரிகப் பைகளாக உருமாறுமே” என்று அலட்டிக் கொண்டது பாம்பு.

இதையெல்லாம் கேட்டபடி அங்கு வந்த புலி உறுமியபடி “நான் இறந்த பிறகு என் தோல் முனிவர்கள் உட்காரும் ஆசனமாகப் பயன்படும்” என்றது.

அருகில் நின்று கொண்டிருந்த கரப்பான்பூச்சி “இறந்த பிறகு உங்கள் பலனைப் பற்றி பேசும் நீங்கள், இருக்கும்போது என்ன கிழித்தீர்கள் என்பதை யோசிக்கக் கூடாது?” என்றது.

மூன்று மிருகங்களும் சற்றே அவமானத்துடன் யோசிக்கத் தொடங்க, “பெருமையடித்துக் கொள்ள முடியாத என்னால், மற்றவர்களின் மகிழ்ச்சியைக் குறைக்கவாவது முடிந்ததே” என்ற அற்ப திருப்தியுடன் அங்கிருந்து நகர்ந்தது.

அருண் சரண்யா

தன்னைக் கண்டதும் மல்லிகா திடுக்கிடுவாள் என அனுஷா நினைத்திருக்க, மல்லிகாவின் முகத்தில் வியப்பு மட்டுமே வெளிப்பட்டது. அழுத்தக்காரி தான்.

''வீட்டிலே நீங்க தனியாகத்தான் இருக்கீங்களா மல்லிகா?''

''ஆமாம்'' அதோடு நிறுத்திக் கொண்டாள் மல்லிகா. நேரடியாகக் கேட்டாலொழிய, இவளாக எதையும் வெளிப்படுத்திவிட மாட்டாள் என்பது புரிந்தது.

''கார்த்திக் உங்களை வேலையிலிருந்து நிறுத்தின பிறகும், நீங்க ரெண்டு பேரும் இதுமாதிரி அடிக்கடி சந்திப்பது உண்டா?''

மல்லிகா, அனுஷாவைக் கூர்ந்து பார்த்தாள். ''உங்க மனசுல பெரிய துப்பறியும் நிபுணர்ங்கிற எண்ணமா?''

''இல்லை. அப்பா அம்மாவை இழந்த ஒரு அப்பாவிப் பெண்ணின் அன்பான அக்கான்னு எண்ணம்''. அனுஷா கூறிய பதிலைவிட அப்போது வெளிப்பட்ட அவளது குமுறலான தொனி மல்லிகாவை அசைத்திருக்க வேண்டும்.

''நீங்க தெரிஞ்சிக்க வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கு. முதலில் ஒரு கப் டீ'' பதிலை எதிர்பார்க்காமல் மல்லிகா சமையறைக்குள் செல்ல, கவுண்ட்டவுன் தொடங்கும்போது உள்ள ராக்கெட் விஞ்ஞானியின் மனநிலையோடு அனுஷா காத்திருக்கத் தொடங்கினாள்.

மேலும் ஒரு மணி நேரம் கடந்தது. ''அடுத்தது நீங்கதான் போகணும்'' என்றாள் தாரா. அனுஷா அவசரமாக நிகழ்காலத்துக்கு வந்தாள். எழுந்தாள்.

உள்ளே நுழைந்த அனுஷாவைப் பார்த்து கார்த்திக் திடுக்கிட்டான்.

''என்ன... நீங்க போய் இங்க... உங்களுக்கு இதயத்துல ஏதாவது சிக்கலா?''

''ஒரு விதத்துல ஆமாம்னும் சொல்லலாம். ஸ்ரீ விஷயமா உங்ககிட்டே கொஞ்ச நேரம் பேசணும். உங்க நோயாளிகள் கிட்டதான் நீங்க அதிகம் பேசுவீங்கன்னு ஒரு நம்பிக்கை. என்னையும் ஒரு நோயாளியாக நினைச்சுப் பேசுங்க. அதுக்காகத்தான் இங்க வந்தேன்.''

''என்ன சொல்றீங்க...? வந்து... வெளியே நிறைய பேர் வெயிட் பண்ணிட்டிருக்காங்க.'' கார்த்திக் தடுமாறியபடியே தன்னைத் தவிர்க்கப் பார்க்கிறான் என்பது புரிந்தது.

''வெளியே நிறையப் பேர் காத்திருக்காங்கன்னு எனக்குத் தெரியும். ஆனா, நீங்க என்னோட பேச நேரம் ஒதுக்கித்தான் ஆகணும். இப்ப இல்லேன்னா நாளைக்காவது பேசணும். எனக்காக இல்லேன்னாலும், ஸ்ரீக்காக இல்லேன்னாலும், அவ வயித்துல வளர்ந்துக்கிட்டிருக்கிற உங்க வாரிசுக்காகவாவது சில விஷயங்களை நாம வெளிப்படையாகப் பேசுறது நல்லது.''

கார்த்திக்கின் முகத்தில் விதவிதமான பாவங்கள் தென்பட்டன. பின் மெதுவாக ''நாளைக்குப் பதினோரு மணிக்கு சந்திக்கலாம். இங்கே வேணாம். ஆஸ்பத்திரிக்கு வந்துடுங்க. அங்கே தனி ரூம் இருக்கு. பதினொண்ணரைக்குத்தான் நோயாளிகளைப் பார்க்க ஆரம்பிப்பேன். அதுவரை பேசலாம்.''

அன்று மாலை அனுஷா சீக்கிரமே வேலையை முடித்துக் கொண்டாள். மனதுக்குள் சிலவற்றைத் திட்டமிட வேண்டியிருந்தது.

'அடுத்த நாள் கார்த்திக்கை சந்தித்துப் பேசிய பிறகு உடனடியாக ஸ்ரீயை இங்கே அழைத்துக்கொண்டு வந்துவிட வேண்டும். அதற்குப் பிறகு...'

சன் மியூசிக் காம்பியரர் ஆனந்த கண்ணன் விரைவில் ஒரு படத்தில் வில்லனாக நடிக்கவுள்ளார். பிரஜன், 'டிஷ்யூம்' படத்தில் இரண்டாவது ஹீரோவாக நடித்து வருகிறார்.



ஹீரோ

தொலைபேசி ஒலித்தது. ராஜன்தான்.

அடுத்த நாள் கார்த்திகைத் தான் சந்திக்கவிருப்பதை அவனிடம் சொல்ல வேண்டும். இப்போதே சொல்லலாமா அல்லது நேரில் வந்ததும் சொல்லலாமா?

அதற்குள் மறுமுனையிலிருந்து ராஜன் பேசத் தொடங்கிவிட்டிருந்தான்.

"நான் வர லேட்டாகும் அனு. பொழியலூர் கோயில் யானை ரெண்டு நாளா சாப்பிட மாட்டேங்குதாம். தவிர, பாகனையும் வரவிட மாட்டேங்குதாம். அதற்கு சிகிச்சை செய்யத்தான் கிளம்பிட்டிருக்கேன்." சட்டென அனுஷாவின் உற்சாகம் வடிந்தது.

"ம்ம்"

"வர ராத்திரியாகும். தேவைப்பட்டா அங்கேயே தங்கும்படியும் இருக்கலாம். அப்படியிருந்தா போன் செய்யறேன். நான் வரலேன்னா ஆனந்தை நம்ம வீட்லயே படுத்துக்கச் சொல்லு."

ராஜன் தொலைபேசியை வைத்த பிறகுதான் அனுஷாவுக்கு ஆனந்தின் சமீபத்திய நடவடிக்கைகள் மனதில் தோன்றின. இப்போதெல்லாம் அவன் தன்னிடம் பேசுவதில்லை. தற்செயலாகவா அல்லது தன்னைத் தவிர்க்கிறானா? அப்படியென்றால் ஏன்?

அனுஷாவுக்கு மலைப்பாக இருந்தது. வரவர பதில் கிடைக்காத கேள்விகள் அதிகமாகிக் கொண்டு வருகின்றன. என்ன செய்யலாம்? 'ஏதாவது செய்தே ஆக வேண்டும்'.

(தொடரும்)



# "தலைகனமும் இல்லை; தடுமாற்றமும் இல்லை!"

**16**.10.2005 தேதியிட்ட கல்கி இதழில் இளைய தளபதி விஜய் பற்றி வெளிவந்துள்ள கட்டுரை முழுக்க முழுக்க தவறான தகவல்களின் அடிப்படையில் எழுதப்பட்டுள்ளது.

இது அவருக்கும் அவரைச் சார்ந்த ரசிகர்களுக்கும் மிகுந்த மன வருத்தத்தை ஏற்படுத்தியுள்ளது.

மற்றவர்களை கேலி பேசுவது, புறம் கூறுவது, தாக்கிப் பேசுவது இப்படி எதுவுமே செய்யத் தெரியாதவர் விஜய். யாருக்கும் தொந்தரவு கொடுக்காமல் அமைதியாக வாழ வேண்டும் என்ற கோட்பாட்டோடு வாழ்ந்து வருபவர் அவர். தனக்கு வாழ்க்கையில் எதிரிகளே இருக்கக் கூடாது என்று நினைப்பதோடு, மற்றவர்கள் மனம் புண்படக் கூடாது என்பதில் கவனமாக இருந்து அளந்து பேசுபவர் அவர்.

அடிப்படையில் அமைதியானவர், அதிகம் பேசாதவர் என்பதால் விழாக்களுக்கு வந்தால் கூட சபை நாகரிகம் கருதி சிரிப்பது, கமெண்ட் அடிப்பது போன்றவை இல்லாமல் விழாவை மட்டுமே அமைதியாக ரசிப்பவர். இப்படிப்பட்ட பண்பாளரைப் பற்றி 'தலைகனத்தில் தடுமாறுகிறாரா விஜய்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட கட்டுரை, முன்னணியில் இருக்கும் ஒரு நடிகரை தவறாக அவரது ரசிகர்கள் நினைப்பது போன்று சித்திரிக்கிறது.

இந்த மாதிரி கட்டுரைகள் வெளியிடும் பட்சத்தில் அவரை வைத்துப் படம் பண்ணியவர்கள், திரையுலகைச் சார்ந்த முக்கியஸ்தர்களிடம் கருத்துக் கேட்டு எழுதியிருந்தால் உண்மை எல்லோருக்கும் புரிந்திருக்கும்.

- பி.டி.செல்வக்குமார்,
விஜய் பி.ஆர்.ஓ.,

# ரஜினியின் லெவனவதாரம்!

செல்போன் ஒலிக்கிறது.

**ஷங்கர் :** ஹலோ டைரக்டர் ஷங்கர் ஹியர்!

**எதிர்முனை:** ஷங்கர்ஜி... நான் சிவாஜி ராவ் பேசறேன். 'சிவாஜி' படத்துல ஒரு முக்கியமான சேஞ்ச்! பேசணும். உடனே புறப்பட்டு வாங்க!

**ஷங்கர்:** டென் மினிட்ஸ்ல வந்துடுறேன்!

*(கேளம்பாக்கம் பங்களா... ரஜினிகாந்த், ஷங்கர், ஒரு உதவி இயக்குநர் உட்கார்ந்திருக்க, பரபர டிஸ்கஷன் ஆரம்பமாகிறது.)*

**ரஜினி:** ஷங்கர்ஜி, ஸ்டோரி லைன்ல சின்னதா ஒரு சேஞ்ச் பண்ணலாம்னு நான் ஆழ்ந்த தியானத்துல இருந்தப்போ தோணிச்சு. எனி ப்ராப்ளம்?

**ஷங்கர் :** அதுக்கென்ன... ஒரே ஸ்டோரி லைனை சின்னச் சின்னதா சேஞ்ச் பண்ணித்தான் 'ஜென்டில்மேன்', 'இந்தியன்', 'அந்நியன்'னு மூணு படம் பண்ணியிருக்கேன். எனக்கு ஒரு ப்ராப்ளமும் இல்ல!

**ரஜினி:** குட், கேட்டுக்கோங்க! கவனம் முக்கியம்! கமலஹாசன் 'தசாவதாரம்'னு பத்து கெட்-அப் பண்ணப் போறாரு. 'அந்நியன்'ல விக்ரம் மூணு, 'கஜினி'ல சூர்யா ரெண்டுன்னு ஆளாளுக்கு மிரட்டுறாங்க. வடிவேலுகூட ஏதோ ஒரு படத்துல ஒன்பது கெட்-அப் பண்ணப் போறாராம். ஸோ, 'சிவாஜி'ல எனக்கு பதினோரு கெட்-அப்பாவது இருக்கணும்.

**ஷங்கர்:** சூப்பர் சார். ரொம்ப பிரம்மாண்டமா இருக்கும். 'அந்நியன்'ல மல்டிபிள் பர்சனாலிட்டின்னா, 'சிவாஜி'ல மல்டி மல்டிபிள் பர்சனாலிட்டின்னு சொல்லி மிரட்டிரலாம். லெவனவதாரம்!

**ரஜினி:** நோ... நோ... வேற மாதிரி ஏதாவது டிஃபரண்டா சொல்லுங்க ஷங்கர்ஜி!

**உதவி:** சார், பேசாம



# லகலகலகலக...

ரஜினி சாரை பகைவர்களை பழிவாங்குற பதினோரு தலை இராவணனா காண் பிச்சுடலாமா?!

**ஷங்கர்:** *(உதவியாளரைப் பார்த்து)* ஹே... வெயிட் பண்ணு. *(ரஜினியிடம்)* உலகையே உலுக்குற மாதிரி ஊழல் செஞ்ச 11 சர்வதேச அரசியல்வாதிகளை நாடு விட்டு நாடு போயி வூடு கட்டி அழிக்கிறீங்க...

**உதவி:** ஆங்.. இதுல 11 செட்-அப் மேட்டரைக் கொண்டு வந்துரலாம். அதாவது 11 தேசங்கள்ல இருக்குற 11 அரசியல்வாதிங்களை ரஜினி சார், 11 போலி பாஸ்போர்ட் மூலம், 11 செட்-அப்ல போயி அழிக்காரு... எப்படி!

**ரஜினி:** நியா இருக்கு.... அப்படியே 11 செட்-அப்பை டெவலப் பண்ணுங்க.

**உதவி:** *(உணர்ச்சிவசப்பட்டு பாட்டு பாடுகிறார்.)*

உந்தன் அவதாரம் லெவன்!
உன் கால் பட்ட இடம் ஹெவன்!
நீ இறைவன் அனுப்பிய மவன்!
உன் நெஞ்சில் என்றும் அவன்!

இப்படி பின்னணில ஒரு பாட்டைப் போட்டு, கேப்ல 'பாபா'வைக் காண்பிச்சு, பட்டையக் கௌப்பிரலாம்.

**ரஜினி:** வாவ்! ஷங்கர்ஜி செட்-அப் யோசனைகளை கட்டவுத்து விடுங்க!

**ஷங்கர்:** முதல்ல உகாண்டா போயி 'உல்மாலுல்லா'ன்னு ஒரு அரசியல்வாதியை ஆதாரமே இல்லாம அழிக்கிறீங்க! அதுக்கு நீக்ரோ வேஷம் வச்சுக்கலாம். அடுத்து ஆஸ்திரேலியா போயி அங்க உள்ள அரசியல்வாதி ஆல்ப்ஸை கங்காரு செட்-அப்ல நொங்கெடுக்கறீங்க! ஒரு லட்சம் கங்காருகளோட நீங்களும் வேஷம் போட்டுத் துள்ளிக் குதிக்க வர்ற மாதிரி கிராபிக்ஸ்ல ரியலா காட்டுறோம்!

**உதவி:** சாந்துப்



பொட்டு கம்பெனி சிங்காரு! நான் உன்னை சாகடிக்க வந்த கங்காரு!

இது பன்ச்!

**ரஜினி:** சும்மா பொட்டுல அடிச்சாப்ல இருக்கு!

**ஷங்கர்:** ஜப்பானுக்கு ஜாக்கிசான் வேஷத்துல போயி, 'லிங்மைமா'ங்கிற அரசியல்வாதியை 'கைமா' பண்ணுறீங்க!

**ரஜினி:** என்னது ஜாக்கி வேஷமா?

**ஷங்கர்:** ஆமா... சைனால ஒரு மேக்கப் மேன் இருக்காரு. பதினெட்டே மணி நேரத்துல மேக்கப் மூலமா உங்களை அப்படியே ஜாக்கிசானா மாத்திடுவாரு! ஆனா அதுக்கப்புறம் 10 மினிட்ஸ்ல மேக் கப் பேக்கப் ஆயிரும்! அந்தக் கேப்புல, ரெண்டே மாசத்துல அந்த ஸீன்களை எடுத்துரலாம்.

**ரஜினி:** தூள்மா!

**ஷங்கர்:** அடுத்து ஆப்பிரிக்காவுல இருக்குற அரசியல்வாதி 'குவாருவா'வை ஆப்பிரிக்க யானை வேஷத்துல போயி தும்பிக்கையால துவம்சம் பண்ணுறீங்க!

**ரஜினி:** பிரமிப்பா இருக்கு!

**ஷங்கர்:** இந்த ஸீனை இன்னும் டெவலப் பண்றோம். அதாவது மதம் புடிச்சு ஓடுற நிஜ ஆப்பிரிக்க யானையை நீங்க யானை வேஷத்துலேயே போய் திருத்துறீங்க!

'கனா கண்டேனை'த் தொடர்ந்து பரத்தை வைத்து அடுத்த படத்தை இயக்கவிருந்த கே.வி.ஆனந்த், ஷங்கரின் அன்பான அழைப்பின் பேரில் 'சிவாஜி'க்கு ஒளிப்பதிவு செய்கிறார்.



அன்பு

**உதவி:** ஒன்-டேல சதம் அடிச்சாலும் கிரிக்கெட் வீரன் தன்நிலை இழக்கக் கூடாது!

மண்டையில மதம் புடிச்சாலும் யானை நீ உன் நிலை மாறக்கூடாது!'ன்னு நீங்க யானைகிட்ட ஒரு வசனம் பேசறப்போ, அந்த யானை கண்ணீர் விட்டுக் கதறும்!

**ரஜினி:** சென்டிமென்ட்யா!

**ஷங்கர்:** அடுத்து ரஷ்யா, சீனா, பிரான்ஸ், பங்களாதேஷ்னு படையெடுத்து ஒவ்வொரு நாட்டுலயும் வில்லன்களுக்கு பால் ஊத்தறீங்க!

**ரஜினி:** ஆங்... அமெரிக்கா, பாகிஸ்தான், இந்தியா... இந்த மூணு கன்ட்ரியும் ரொம்ப இம்பார்ட்டன்ட்! என்ன கெட்-அப்?

**ஷங்கர்:** பாகிஸ்தானுக்கு ஜார்ஜ் புஷ் கெட்-அப், அமெரிக்காவுக்கு பின்லேடன் கெட்-அப்.

**உதவி:** அதாவது ஜக்குபாய் கெட்-அப்!

**ஷங்கர்:** இந்தியாவுல நடக்கறதுதான் க்ளைமாக்ஸ்! அந்த அரசியல்வாதியைக் கடத்தி வச்சுட்டு, பி.பி.சிக்கு கேசட் அனுப்புறீங்க! இந்தியா கேட்ல ஒரு குறிப்பிட்ட டைமுக்கு வந்து பொதுமக்களை சந்திக்கறதா சவால் விட்டு, உங்க ஒரிஜினல் கெட்-அப்லயே போயி சம்ஹாரம் பண்ணுறீங்க!

**உதவி:** ஒரொன் ஒண்ணு! இது வாய்ப்பாட்டு கணக்கு!

ஒரொன் பதினொன்னு! இது என் வாய் சொல்லுற கணக்கு! அப்படியே மேல கையைக் காட்டி, 'ஆண்டவன்ஜி சொல்றான்... சிவாஜி கொல்றான்!' அப்படின்னு ஒரு பன்ச் டயலாக் உடுறீங்க!

**ஷங்கர்:** அப்புறம் ஸ்ரேயாகூட சீக்ரெட்டா அண்டார்டிகாவுக்கு போயி, இன்டெர்நெட் மூலம் அகில உலகை உங்க வெப்-சைட் மூலமாவே ஆட்சி பண்ணுறீங்க! எப்படி!

**ரஜினி:** கனலா இருக்கு! செம தீனி எனக்கு! பதினொரு கெட்-அப்போட ஆண்டவன் கொடுத்த இந்த உடம்பை ரீ-சார்ஜ் பண்ணணும். அதனால ஒரு மாசத்துக்கு இமயமலைல குகைக்குள்ள குத்த வச்சுக்கிட்டு வந்துடுறேன்!

(ஷங்கரும், உதவியும் விக்கித்து நிற்கின்றனர்.)

கற்பனை: **முகில்**

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

10/1, ராஜேஸ்வரி தெரு, பெரம்பூர், சென்னை — 600 011
தொலைபேசி எண் 25511786 மொபைல் : 9444035876

(நாம சங்கீர்த்தனத்துடன் ஆன்மிக அன்பர்களை அழைத்துச் செல்லும் சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

1. 5.12.05 ஒரு நாள் சோளிங்கர், திருத்தணி, காக்களூர் பயணம் பஸ் கட்டணம் மட்டும் ரூ. 150/- (சாப்பாடு அவரவருடையது)
2. 7.12.05 முதல் 12.12.05 வரை 5 நாட்கள் கொண்ட சோழ நாட்டு திவ்ய தேசங்கள் (40 கோயில்கள்). டீலக்ஸ் பஸ், பொதுவான இரவு தங்குதல் கூடம், உணவு அனைத்தும் உட்பட கட்டணம் ரூ. 2500/-
3. 18.1.06 முதல் 2.2.06 வரை 15 நாட்கள் கொண்ட சப்த ஜோதிர் லிங்கங்கள் (மஹாராஷ்ட்ரா-உஜ்ஜெயின்) மற்றும் பண்டரிபுரம், ஷீரடி, சனி சிங்கனாப்பூர், கொல்லாப்பூர் மஹாலக்ஷ்மி ஆகியவை. இரயில், டீலக்ஸ் பஸ் மற்றும் இரவு தங்குதல் உணவு உட்பட கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 7400/-
4. 08.2.06 முதல் 14.2.06 வரை 5 நாட்கள் கொண்ட பஞ்ச ஆராம க்ஷேத்ரங்கள் ஆந்திர மாநில யாத்திரை - அமராவதி, பீமாவரம், பால்கோலு, சாமல கோட்டா, தாக்ஷாவரம் ஆகிய சிவஸ்தலங்கள் மற்றும் விஜயவாடா, கனகதுர்கா, பானக நரசிம்மர், சிம்ஹாசலம், பத்ராசலம், அன்னாவரம் இரயில், பஸ், சாப்பாடு உட்பட கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 2800/-
5. 18.2.06 முதல் 25.2.06 வரை 7 நாட்கள் கொண்ட கர்நாடக மாநில யாத்திரை: மேல்கோட்டை நரசிம்மர், தலைகாவேரி, ஸ்ரீரங்கப்பட்டணம், உடுப்பி, கடீல் துர்கா பரமேஸ்வரி, மூகாம்பிகை, தர்மஸ்தலா, கோகர்ணம், முருடேஸ்வரர், கொல்லூர் முகாம்பிகை, பேலூர், ஹளபேடு ஆகியவை இரயில், பஸ், இரவு தங்குதல் சாப்பாடு உட்பட கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 3400/-
6. 28.2.06 முதல் 5.3.06 வரை 4 நாட்கள் ஸ்ரீசைலம், மந்த்ராலயம், அஹோபிலம் கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 1650/-
7. 20.3.06 முதல் 31.3.06 வரை 12 நாட்கள் காசி, கயா, அயோத்தியா, அலகாபாத், நைமிசாரண்யம் - கட்டணம் ரூ. 5150/-
8. 20.3.06 முதல் 3.4.06 வரை 19 நாட்கள் காசி மற்றும் நேபாள முக்திநாத் (சாளக்கிராம) மற்றும் பசுபதிநாத் யாத்திரை கட்டணம் ரூ. 8100/-

**V.சீனிவாசன்**
(அமைப்பாளர்)

பங்கு பெறுவீர்! பாக்கியவான்களாவீர்! மாருதி யாத்திரை பக்தியுடன் பகவத் அனுகிரஹத்தைப் பெறுவதற்கே மிகுந்த சௌகர்யத்திற்கும், வசதிக்கும் அல்ல.

மேற்படி யாத்திரையின் கட்டணம் மற்றும் விபரம் அறிய சுய விலாசமிட்ட ரூ. 5/- ஸ்டாம்ப் கவருடன் விண்ணப்பிக்கவும்.

Visit our Website: www.srimaruthitravels.net www.srimaruthitravels.com

# ஜாதகமே தேவையில்லை! உங்களை அதிர்ஷ்டசாலியாக்குகிறார்!

விஜய் டிவியில் திங்கட்கிழமை தோறும், காலை 9.45 மணிக்கும், ராஜ் டிவியில் தினமும் காலை 7.00 மணிக்கும், தமிழ்த்திரை டிவியில் பல முறை தோன்றும் புகழ்பெற்ற பரம்பரை ஜோதிடர் ஒருவருடைய முகத்தைப் பார்த்தும், கைரேகை அல்லது புகைப்படத்தை பார்த்தும் முனீஸ்வரர் அருளால் நீங்கள் நினைத்து வந்த காரியத்தை நேரில் பார்த்தது போல் பளிச் என்று பலன் சொல்லி உங்கள் அனைத்து பிரச்சனைகளையும் செய்வினை தோஷங்களையும் முனீஸ்வரர் அருளால் நிவர்த்தி செய்து அதிர்ஷ்டசாலி ஆக்குகிறார்.



## அருள்வாக்கு சித்தரின் வெளியூர் விசிட்

பிரதி மாதம் தேதி

| தேதி | ஊர் | இடம் |
|---|---|---|
| 2 | காஞ்சிபுரம் | ஹோட்டல் MM |
| 4 | தஞ்சாவூர் | Temple Tower |
| 5 | திருச்சி | ஹோட்டல் ரம்யாஸ் |
| 8 | மதுரை | ஹோட்டல் செந்தூர் |
| 9 | திருநெல்வேலி | ஹோட்டல் ஆர்யாஸ் |
| 12 | பாண்டி | ஹோட்டல் ஜெயராம் |
| 13 | திரு அண்ணாமலை | ஹோட்டல் ஆகாஷ் |
| 15, 16 | மும்பை | சவுத் இண்டியன் கன்ஸ்ட்ரக்ஷன், மாதுங்கா |
| 19 | சேலம் | ஹோட்டல் நேஷனல் |
| 20 | தர்மபுரி | ஹோட்டல் DND |
| 21 | ஓசூர் | ஹோட்டல் ஸ்ரீனிவாசா |
| 22, 23, 24 | பெங்களூர் | ஹோட்டல் உட்லண்ட்ஸ் |
| 25 | வேலூர் | ஹோட்டல் வசந்த விஹார் |
| 27 | ஈரோடு | ஹோட்டல் ஆக்ஸ்போர்டு |
| 28 | கோவை | ஹோட்டல் தமிழ்நாடு |
| 29 | திருப்பூர் | ஹோட்டல் ராமகிருஷ்ணா |

**முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தர்**
**ஓமிட் & ஓமிட் V.V.M.B. நல்லப்பன் நீலகண்ட சிவா**
எண்.32, மகாலட்சுமி தெரு, தி.நகர், சென்னை - 600 017.
போன் : 24761913, செல் : 98412 94932, 94444 16854


என்னங்க, தீபாவளிக்கு 50 ஆயிரம் கலர் பட்டுப்புடைவை வந்திருக்கு.. வாங்கித் தாங்க!
டோண்ட் ஒர்ரி டார்லிங்.. நாளைக்கே பர்ச்சேஸ் பண்ணிடலாம்!
வானவில்லோட ஏழு கலருக்கே உனக்கு வித்தியாசம் தெரியாது. இதுல 50 ஆயிரம் கலர் புடைவையா...
நெனைச்சது ஒன்ணு... சொல்றது ஒன்ணு..!
தீபாவளிக்குத் தலைவரோட புதுப்படம் ரிலீஸாகுது... வர்றியா போவோம்?
ப்ளாக்ல வாங்கியாச்சும் படம் பார்த்துடுவோம்.
போனஸ் வாங்கினதும் மொய் எழுத வைக்கிறானே... பாவி, உருப்படுவானா?
மன்னிச்சுக்குங்க மாமா... தலை தீபாவளிக்கு பத்து நாள் முன்னாடியே உங்க வீட்டுக்கு வந்துட்டேன்.
என்ன மாப்ள நீங்க? நீங்க எப்ப வந்தாலும் வாசக் கதவு திறந்தே இருக்கும்!
திருடன் சீக்கிரம் வந்தா என்ன, பத்து நாள் கழிச்சி வந்தா என்ன... எல்லாம் தலையெழுத்து!
- தெனாலி



''நேத்து சச்சின் டெண்டுல்கருக்கு நான் போன் பண்ணேன்.''

''அப்படியா, என்ன சொன்னாரு ?!''

''ராங் நம்பர்னாரு!''

- தெனாலி

# பட்டாசா சிரிங்க!

''ஒரு தடவை போடுறதே கஷ்டம்... நீ உன் மாமியாரோட ரெண்டு தடவை சண்டை போடுவியா?''

''ஆமாம்... ஸன்டேன்னா ரெண்டு...''

- எஸ். மோகன்





''இது சினிமா வெடியா... ஆச்சர்யமாயிருக்கே... என்ன ஸ்பெஷல்?''

''வெடிச்சிட்டு மன்னிப்புக் கேக்கும் சார்!''

- தா. ஆறுமுகம்

"டாக்டர், என்னால ஆளுங்க பேசறதை கேட்க முடியுது... ஆனா பார்க்க முடியறதில்ல..."

"எப்பல்லாம் இப்படி ஆவுது?"

"டெலிபோன்ல பேசும் போதெல்லாம்!"

- தெனாலி





"ஆயிரக்கணக்கான கலர் உள்ள புடவையை தீபாவளிக்கு என் கணவர் எடுத்துக் கொடுத்துட்டாரு"

"அதை ஏண்டி சோகமா சொல்ற?"

"இனி அந்த கலர், இந்த கலர் புடவை இல்லைன்னு சொல்லி கேட்க முடியாதே."

- ச. தமிழ்ச்செல்வி

"உங்க தாத்தாவுக்கு எமன் தெரியறான்னு சொல்லி மருந்து வாங்கிட்டுப் போனீங்களே, இப்ப எப்படி இருக்கு...?"

"இப்ப பரவாயில்லை டாக்டர். சித்ரகுப்தன்தான் தெரியறானாம்."

- வி. சாரதிடேச்சு



வாழ்க்கை சந்தோஷமாக இருக்கிறது; மனம் நிம்மதியாக இருக்கிறது என்று சொல்கிறவர்களுக்கு திடீரென்று ஒரு பிரச்னை வந்துவிட்டால், அப்போதும் அவர்களால் சந்தோஷமாக இருக்க முடியுமா? மன நிம்மதி தொடருமா? என்றால் எனது முதல் பதில் "முடியாது"; இரண்டாவது பதில் "முடியும்". என்ன குழப்பமாக இருக்கிறதா?

விளக்கமாகச் சொல்லுகிறேன். உங்கள் குடும்பம், உங்கள் பிசினஸ், உங்களுடைய சுற்றம், நட்பு, அக்கம் பக்கம் இவை உங்களுடைய சந்தோஷத்துக்கும், மன நிம்மதிக்கும் காரணம் என்றால், அதாவது உங்களுக்குப் புறத்தே நிகழும் விஷயங்கள்தான் என்றால், உங்கள் மகிழ்ச்சியும், நிம்மதியும் நிரந்தரமானவை இல்லை.

இந்த உலகத்தில் நிலையானது ஒன்றுமில்லை என்று பொதுவாகச் சொல்லப்பட்ட போதிலும், மாற்றம் என்பது நிலையானது என்பதை நீங்கள் அனைவருமே ஒப்புக் கொள்ளுவீர்கள். அப்படி ஏற்படும் மாற்றங்கள், உங்கள் புறத்தே நடைபெறும் அனைத்தையும் பாதிக்கும் தன்மை கொண்டவை. எனவேதான் என் முதல் பதில், "முடியாது".

சரி! 'முடியும்' என்றும் சொல்லி இருக்கிறேனே... அது எப்படி சாத்தியம்?

உங்களுடைய சந்தோஷமும், மன அமைதியும் உங்களுக்கு வெளியில் இருக்கக் கூடிய விஷயங்களைச் சார்ந்து இல்லாமல் இருக்கும் பட்சத்தில், அவை சம்பந்தமாக என்ன மாற்றம் நிகழ்ந்தாலும், அதனால் நீங்கள் கண்டிப்பாக பாதிக்கப்பட மாட்டீர்கள். அந்த நிலைக்கு நீங்கள் உங்களை உயர்த்திக்கொள்ள வேண்டும்.

அதுபோல உயர்த்திக் கொள்வது சாத்தியமா? இந்தக் கேள்வி உங்களுடைய மனத்தில் உடனே எழக்கூடும்.

அது நிச்சயமாகச் சாத்தியம்தான் என்று உறுதியாக என்னால் சொல்ல முடியும். அதே சமயம் நான் இன்னொரு முக்கியமான விஷயத்தையும் சொல்லிவிட விரும்புகிறேன்.

அது, அத்தனை சுலபமான விஷயமில்லை. அதற்கு கீதைபோன்ற நூல்களை ஆழமாய்ப் படிக்க வேண்டும். புரிந்து கொள்ள வேண்டும். அது மிகவும் நுணுக்கமான ஒரு டெக்னிக். அதைப் புரிந்து கொண்டு பின்பற்றினால், புற விஷயங்களைச் சார்ந்திராத மகிழ்ச்சியும், மன நிம்மதியும் உங்களுக்கு வாய்க்கும்.

நம் வீடுகளில் என்ன நடக்கிறது? அற்ப விஷயங்கள் குறித்த வாக்குவாதங்கள் தொடங்கி, பெரிய பிரச்னைகள் குறித்த சண்டை வரை அடிப்படைக் காரணம் ஒன்றுதான். நாம் பாட்டுக்கு பேசிக் கொண்டே போகிறோம். அடுத்தவர் என்ன சொல்கிறார் என்பது குறித்த அக்கறை கிடையாது. "நான் சொல்லுவதுதான் சரி. எனவே அனைவரும் என் கருத்தை ஏற்றுக்கொண்டே ஆக வேண்டும்". இப்படித்தான் இருக்கிறது அனைவரது மனப்பான்மையும்.

நம் கருத்துக்கு மாற்றுக் கருத்து ஏன் இருக்கக் கூடாது என்று யோசிப்பதில்லை. மாற்றுக் கருத்து சொல்லப்படுகிறபோது, அதை கேட்டுக் கொள்ளுவதற்குப் பொறுமை கிடையாது.

மொத்தத்தில் இந்த வாதங்களும் விவாதங்களும் விமர்சனங்களும், மோதல்களும் - சந்தோஷத்துக்கும், மன அமைதிக்கும் பாதிப்பைதான் ஏற்படுத்துகின்றன. எத்தனை நாளைக்குத்தான்

# புத்திசாலியாக வேண்டுமோ?



இதுபோன்ற குட்டையிலேயே மனிதன் உழன்றுகொண்டு இருக்க வேண்டுமா? குழம்பிய குட்டையை விட்டு வெளியே வர வேண்டாமா? மனத் தெளிவைப் பெற வேண்டாமா?

பள்ளிக்கூடத்தில் படிக்கிறபோது, கணித வகுப்பில் 'கிராஃப்' வரைந்திருப்பீர்களே! அதை நினைவு படுத்திக் கொள்ளுங்கள். அதில் 'பூஜ்ஜியம்' என்று ஒரு புள்ளியைக் குறித்துக் கொள்ளுங்கள். நூறு என்று இன்னொரு புள்ளியைக் குறித்துக் கொள்ளுங்கள். இரண்டையும் இணைத்து ஒரு கோடு போடுங்கள்.

'பூஜ்ஜியப் புள்ளி', மனித இனத்துக்கு இருக்க வேண்டிய குண நலன்கள் எதுவுமில்லாத ஒரு நிலையைக் குறிப்பதாக வைத்துக் கொள்வோம். 'நூறு' என்ற புள்ளி நூற்றுக்கு நூறு சதவீதம் பர்ஃபெக்டான பண்புகள் கொண்ட நிலையைக் குறிப்பதாக வைத்துக் கொள்வோம்.

நாம் அனைவருமே நூற்றுக்கு நூறு சதவீதம் பர்ஃபெக்டானவர்கள் கிடையாது. அதேசமயம் பூஜ்ஜியப் புள்ளி ஆசாமிகளும் கிடையாது. ஆக, எல்லோருமே பூஜ்ஜியத்துக்கும், நூறுக்கும் இடையில் ஏதோ ஒரு புள்ளியில் பொருந்துவோம்.

இப்போது உங்கள் இடம் அந்த வரைபடக் கோட்டிலே எங்கே இருக்கிறது என்பது பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. எங்கே வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும்.

ஆனால், ஒரு விஷயத்தை நீங்கள் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் உங்களுக்குரிய இடத்திலிருந்து புறப்பட்டு மேல்நோக்கியும் போகலாம். அல்லது பூஜ்ஜியத்தை நோக்கிக் கீழேயும் செல்லலாம். இந்த இரண்டுமே உங்களுக்கு இருக்கிற சாய்ஸ். நீங்கள் எதைத் தேர்ந்தெடுக்கப் போகிறீர்கள் என்பதுதான் கேள்வி.

பலரும் மேல் நோக்கிப் போக வேண்டும் என்றுதான் விரும்புவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அது எல்லோருக்கும் சாத்தியமாகுமா என்பதுதான் கேள்வி.

எல்லோருக்கும் சாத்தியம்தான் என்பதுதான் என் கருத்து. அதற்கு உண்மையை அறிய வேண்டும் என்கிற உந்துதலும் ஆர்வமும் இருந்தால் போதும். இந்த ஆர்வத்தை ஏற்படுத்தும் வல்லமை நம் மனத்தைக் காட்டிலும் நம் அறிவுக்கே அதிகம்.

மனிதனின் விருப்பங்கள், வெறுப்புகள், தேவைகள், இவற்றினால் ஏற்படும் உணர்ச்சிகளின் ஒட்டுமொத்த பிரதிபலிப்புதான் மனம். இந்த மனத்தைவிட ஒரு படி அதிக உயரத்தில் இருப்பது புத்தி.

ஆன்மிகம் மற்றும் பகவத் கீதை சொற்பொழிவுகளில், புத்திக்குத்தான் உணவளிக்கப்படுகிறது. அது ஜீரணமாக வேண்டுமானால், நீங்களும் கொஞ்சம் கொஞ்சம் முயற்சி செய்ய வேண்டும். சொல்லப்படும் கருத்துக்களைப் பற்றி திரும்பத் திரும்பச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சிந்திப்பதனால், தெளிவு ஏற்படும். உண்மை புலப்படும். அந்த உண்மைகளை உங்கள் வாழ்க்கையின் விதிகளாகக் கடைப்பிடியுங்கள். அப்படிச் செய்கிறபோதுதான் உங்கள் புத்தியைப் பயன்படுத்தி அறிந்து கொண்ட விஷயங்களைக் கடைப்பிடித்து, நீங்கள் புத்திசாலியாக முடியும். அப்படி அறிந்து கொள்ளும்

**கேரளாவைச் சேர்ந்தவராக இருந்தாலும் தமிழ்நாட்டில் வசிப்பதால் அஞ்சு ஜார்ஜுக்கு ஐம்பது லட்சம் வரை உதவி செய்திருக்கிறது தமிழக அரசு. இந்தளவுக்கு கேரள அரசு கூட செய்ததில்லை.**



**கேரளா**

விஷயங்கள் சாதாரணமானவை இல்லை. வாழ்க்கையின் தத்துவங்கள், வாழ்க்கையின் விதிமுறைகள் உலகில் வாழும் எல்லா மனிதர்களுக்கும் பொருத்தமானவை. எவரையும், வாழ்க்கையின் ஒரு கட்டத்திலிருந்து அடுத்த கட்டத்துக்கு வழிகாட்டி மேம்படுத்துபவை. அவற்றை, உங்கள் வாழ்க்கையின் அங்கமாக நீங்கள் ஆக்கிக் கொள்ள வேண்டும்.

அப்படி இல்லாமல், தெரிந்து கொண்ட விஷயங்களைச் சிந்தித்துப் பார்க்காவிட்டாலோ, கடைப்பிடிக்கா விட்டாலோ, நீங்கள் வெறும் விஷயம் தெரிந்த மனிதர் - அவ்வளவுதான்.

என்னுடைய தந்தை, தனக்கு ஏற்பட்ட ஓர் அனுபவத்தை, இதை சொற்பொழிவுகளின்போது பகிர்ந்து கொள்வார் :

சென்னை நகரத்தின் வெயில் மிகவும் பிரசித்தி பெற்றது. சென்னையில் வெயில், அதிக வெயில், மிக அதிக வெயில் என்று மூன்று சீசன்கள்தான் உண்டு என்றுகூட ஜோக் அடிப்பார்கள்.

சென்னையில், ஒருமுறை என் தந்தை வகுப்பு நடத்தினார். அது கடுமையான வெயில் காலம். சென்னையில் இன்னொரு பிரச்னையும் உண்டு. காற்றில் ஈரப்பதம் அதிகம் என்பதால், வெயில் நேரத்தில் மிகவும் வியர்க்கும்.

வகுப்பில் இருந்த மாணவர்கள், 'வகுப்பறைக்குள் காற்றே இல்லை; ஒரே புழுக்கம்' என்று புலம்பிக் கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் என் தந்தை வகுப்பறைக்குள் நுழைந்தார். மாணவர்கள் "வகுப்புக்குள் உட்காரவே முடியவில்லை" என்று சொன்னார்கள்.

அவர் உடனே, "ஓ! அப்படியா! வாருங்கள் எல்லோரும் வகுப்புக்கு வெளியில் போகலாம்!" என்று சொல்லிவிட்டு, வகுப்பைவிட்டு வெளியில் வந்துவிட்டார். மாணவர்களும் அவரைப் பின்தொடர்ந்தார்கள்.

ஆனால், அவர்கள் மனத்தில் 'வகுப்பறைக்குள்ளேயே புழுக்கம் தாங்க முடியவில்லை. இவர் என்னடாவென்றால், வகுப்புக்கு வெளியில், வெயிலிலேயே கொண்டு வந்து நிறுத்திவிட்டாரே!' என்று நினைத்துக் கொண்டார்கள்.

திறந்தவெளியில், சூரியனின் பகல்நேர நேரடி தகிப்பை மாணவர்கள் உணர்ந்து தவித்தார்கள்.

என் தந்தை மாணவர்களைப் பார்த்துக் கேட்டார். "என் அன்புக்குரிய இளம் நண்பர்களே... வகுப்புக்குள்ளே காற்றோட்டமில்லை. ஒரே புழுக்கம் என்று கஷ்டப்பட்டீர்களே! அதனால்தான் அங்கே இருந்து வெளியில் அழைத்துக் கொண்டு வந்துவிட்டேன்" என்றவர், அடுத்து மாணவர்களைப் பார்த்துச் சொன்னார்.

"இந்தக் கோடை வெயில் எவ்வளவு நன்றாக இருக்கிறது!"

இப்படி அவர் சொன்னதைக் கேட்டதும் மாணவர்கள் ஒருவருக்கொருவர் ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டனர். 'இவருக்கென்ன பைத்தியமா?' என்பதுபோல இருந்தது அவர்களது பார்வை.

மாணவர்கள் எல்லாம் வெயிலைச் சபித்துக் கொண்டிருக்க, இவர் மட்டும் ஏன் வெயிலை ரசித்துப் புகழ்ந்தார்?

யோசித்துப் பாருங்கள்.

*(வெற்றி தொடரும்)*

## ஓவர்



**'கஜினி' படத்தில் தாம் ஓவர் குண்டாக இருப்பதை எல்லோரும் கிண்டலடிக்க, உடம்பைக் குறைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் நயன்தாரா.**

# கல்யாண்ஜி கவிதைகள்

- தகப்பன் தலைதுவட்டி விடுகிறான்
தங்கக்கொடி போல எதிர்வெயிலில்
ஈரம் சொட்டும் உடம்புடன்
அம்மணமாக நிற்கிறது
ஐந்தாறு வயதுப் பெண் குழந்தை.
நவதானியம் முளைத்துக் கிடக்கிறது
கல் மண்டபத்துக் குழிகளில்
மணல் திருடப்பட்ட
முன்னடித் துறையில்
முங்கிக் குளிக்கிறார்கள் மக்கள்.
பழக்கதோஷத்தில் ஓடிக்
கொண்டிருக்கிறது
பாடல் பெற்ற ஆறு.

- வெயிலோ நிழலோ
வீட்டுக்குள் வந்ததும் உட்காரச்
சொல்லி
குடிக்கத் தண்ணீர்
கொடுப்பார்கள் முன்பெல்லாம்
இப்போது
வரவேற்பறைக்குள்
வந்ததும் வராததுமாக
காற்றாடியைச் சுழலவிட்டு
பத்திரிகை தருகிறார்கள்.
அப்போது அனைத்தும்
நீரால் அமைந்தன.
இப்போது எல்லாமும்
காற்றோடு போவன.

- கல்யாணப் பந்தியில்
தலைவாழை இலையருகே
தண்ணீர் பாட்டில்.
காணாமல் போய்க் கொண்டிருக்கிறது
கல் உப்பும்
கங்கைகொண்டான் நதியும்.

- கச்சேரி வாசலில் விளையாடிவிட்டு
கைகால் கழுவியிருக்கிறோம்
கோயில் யானை தும்பிக்கையால்
தண்ணீர் குடித்ததுண்டு
தேங்காய்க் கடை பிள்ளை வீட்டில்
நீர்மாலை எடுத்திருக்கிறார்கள்
துட்டிக்கு.
கோட்டிக்காரச் சொக்கன்போல
நிறையப்பேர்
குளித்திருக்கவும் கூடும்.
எத்தனை குடம் தண்ணீர்
எடுத்திருப்பார்கள்
இந்தத் தெரு பெண் பிள்ளைகள்.
ஆற்றுத் தண்ணீர்க் குழாய்
அங்கங்கே வந்தபிறகு
அனாதையாகிவிட்டது தெரு பைப்.
நீர் அடித்து நீர் விலகுமா என்றால்
என்ன சொல்வீர்கள்
நீங்கள் இப்போது?

- திரையரங்கிலிருந்து உங்கள்
சிநேகிதனுடன் திரும்புகிறீர்கள்,
மழை பெய்கிறது.
மகப்பேறு மருத்துவரிடம்
உங்கள் மனைவியைக்
காண்பித்துவிட்டு
வருகிறீர்கள்,
மழை பெய்கிறது.
பள்ளி விளையாட்டு விழாவில்
பங்குபெற்ற உங்கள் மகளை
சைக்கிளின் பின்னால் இட்டு
வருகிறீர்கள்,
மழை பெய்கிறது.
பக்கத்து வீட்டுக்காரரை மயானத்தில்
எரியூட்டிவிட்டு வருகிறீர்கள்,
மழை பெய்கிறது.
நாம் வேறுவேறு செய்கிறோம்.
மழை மழையை மட்டும்.

ஓவியம்: அனந்தபத்மநாபன்



# விலை

"**சா**ர்! வணக்கம். உங்க கடையில ஏதாவது வேலை இருந்தா கொடுங்க. நான் நல்லா வேலை செய்வேன். என் வேலையைப் பொறுத்து சம்பளத்தை நீங்களே முடிவு செய்யுங்க."

தன் கடைக்கு வந்து ஒரு பையன் கெஞ்சியதைப் பார்த்த முதலாளி சிவாவுக்கு மனம் இளகியது.

'கடையில் வேலை செய்ய ஒரு பையன் தேவைதான். பேசாமல் இவனையே சேர்த்துக் கொண்டால் என்ன?' என்று நினைத்தார்.

'பையன் நல்லவனாக இருப்பானோ...? முகத்தைப் பார்த்தால் அப்படித்தான் தெரிகிறது... சரி, சேர்த்துக் கொள்வோம்' என்று முடிவெடுத்தார்.

"சரி, இன்னைக்கே நீ வேலையில் சேர்ந்துக்கோ."

பையன் சந்தோஷமாக வேலை செய்ய ஆரம்பித்தான்.

நண்பர் ஒருவர் வந்தார்.

"என்ன சிவா! பையன் யாரு, என்ன?"

விஷயத்தைச் சொன்னதும், "எந்தத் தகவலும் தெரியாம, அவன் நல்லவனா, கெட்டவனான்னு புரியாம யாராவது வேலைக்குச் சேர்த்துக்கு வாங்களா? என்றார் வந்தவர்.

"பார்த்தா நல்லவனா தெரியுது. சரி, உனக்காக வேணா டெஸ்ட் பண்றேன்."

"எப்படி?"

"இப்பப் பாரு..." என்றவர்,

"தம்பி இங்க வா. பக்கத்துத் தெருவுல ஐஸ்வர்யா கடைக்குப் போய், இந்த சீட்ல எழுதியிருக்கிற பொருளை வாங்கிட்டு வா... விலை எழுபது ரூபாய் இருக்கும். ஏமாத்திடப் போறாங்க. பார்த்து வாங்கிட்டு வா" பணத்தையும் சீட்டையும் கொடுத்தனுப்பினார்.

பையன் சென்றதும்,

"நான் வாங்கி வரச் சொன்ன பொருளோட விலையே ஐம்பது ரூபாய் தான். ஆனா, நான் எழுபது ரூபாய்னு சொல்லியிருக்கேன். அவன் வந்து ஐம்பது ரூபாய்னு சொன்னா, நல்ல பையன். ஆனா நான் சொன்னதை நம்பி எழுபது ரூபாய்னு பொய் சொல்லி, பணம் அடிச்சான்னா அவன் கதை கந்தல்தான்" என்றார் சிவா.

"ஆஹா... நீ பயங்கரமான ஆளுதான்" என்றார் நண்பர்.

சிறிது நேரத்தில் வந்த பையன், பொருளை சிவாவிடம் நீட்டிவிட்டு, "சார், நீங்க சொன்ன பொருளோட விலை அம்பது ரூபாய்னு கடைக்காரர் சொன்னார். ஆனா, நான் அவர்கிட்ட பேரம் பேசி நாப்பது ரூபாய்க்கே வாங்கிட்டு வந்துட்டேன்" என்றான். இருவரின் முகத்திலும் ஈயாட வில்லை. ○

கா.கதிர்வேல்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214


## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 17 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் **பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| • | காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • | மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • | இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • | இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • | ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • | ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • | குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா — நல்லாசியுடன் — A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

# “ஹாட் ஏஸ்

ஆடிப்போயிருக்கிறார் சானியா மிர்சா. சென்டர் கோர்ட்டில் மரியா ஷெரபோவா, செரினா வில்லியம்ஸ் போன்ற முன்னணி வீரர்களின் தாக்குதல்களை விடவும் மீடியா மற்றும் மத அமைப்புகளின் கண்டனக் குரல்களிடமிருந்து தப்புவதுதான் அவருக்குப் பெரும் பாடாக இருந்து வருகிறது.

தயக்கத்துக்குப் பிறகே நம்மிடம் பேச ஒப்புக்கொண்டார்.



* சிம்பு

**பேட்டி கொடுக்க இப்படித் தயங்குகிறீர்களே...?**

"விளையாட்டு பத்திரிகையாளர்கள் என்னைப் பேட்டி எடுக்கும் வரை எந்தப் பிரச்னையுமில்லாமல் இருந்தது. ஆனால் நாளடைவில் என்னை ஒரு செலிபிரிட்டியாக, அதிசயமாக பத்திரிகைகளும் டெலிவிஷன் சேனல்களும் பார்க்கத் தொடங்கியது முதல் எல்லாமே தலைகீழாக மாறி, எனது அமைதியைக் குலைத்துவிட்டன. கொல்கத்தாவில் நடந்த சன்ஃபீஸ்ட் போட்டியில் என் பாதுகாப்புக்காக 2,500 செக்யூரிட்டிகள் குவிக்கப்பட்டிருந்தார்கள். இந்த ப்ரஷர் எல்லாம் எனக்குத் தேவையா? விளையாட்டில் மட்டும் கவனம் செலுத்த ஏன் யாருமே விடுவதில்லை?"

**அமெரிக்காவின் 'டைம்' பத்திரிகை அட்டையில் வந்துவிட்டீர்களே...**

"அது ஒரு சந்தோஷமான நிகழ்வுதான். மற்றபடி அதில் புளகாங்கிதம் அடைவதற்கு ஒன்றுமேயில்லை. ஒரு விளையாட்டு வீரருக்கு ஆட்டத்தில் ஜெயிப்பதை விட வேறு எதுவும் பெருமை தேடித் தந்துவிடாது.

**விளம்பர சர்ச்சை குறித்து...?**

"31வது ரேங்க் வரைக்கும் வந்தபின்பும் ஆட்டத்தில் கிடைக்கும் பணம், என் செலவுகளுக்குப் போதவேயில்லை. பயணச் செலவு, தங்கும் செலவு, பயிற்சியாளருக்கான கட்டணம்.. என வருடத்துக்குக் குறைந்தபட்சம் மூன்று கோடி வரை செலவாகிறது. இதைவிட அதிக வசதிகளுடன் பயிற்சி பெறும் வீராங்கனையுடன்தான் நான் மோத வேண்டிய கட்டாயம் இருப்பதால், இதை ஈடுகட்டவே விளம்பரங்களில் நடிக்கிறேன். அரசாங்கத்தின் உதவியின்றி எனது செலவுகளை நானே பார்த்துக் கொள்வதற்காக விளம்பரங்களில் நடித்தால்; அதை எல்லோரும் தவறாகப் பேசுவதா? வருடத்துக்கு இருபத்தைந்து நாட்களுக்கு மேல் விளம்பரங்களின் படப்பிடிப்புகளுக்கு ஒதுக்குவதில்லை தெரியுமா?" என்று வருத்தப்பட்ட






சானியாவுக்கு ரசிகர்கள் தம்மைப் புரிந்து கொள்ளவில்லையே என்பதில் பெரும் ஆதங்கம்.

''உலகின் நம்பர் ஒன் ப்ளேயர் கூட அடிக்கடி தோற்பார். அடிக்கடி காயம் படும். இதெல்லாம் விளையாட்டில் சகஜம். ஆனால், எனக்கு மட்டும் தோல்விகளும் காயங்களும் ஏற்பட்டால் பெரிய கூப்பாடு, ஆயிரம் கேள்விகள்.''

**சரி, எப்பொழுது சென்னை வருவதாக உத்தேசம்?**

"தமிழ்நாட்டு மக்கள் என்மீது அதிக அன்பு வைத்திருக்கிறார்கள் என்று எனக்கு நன்றாகவே தெரியும். என்ன செய்வது, உங்கள் ஊரில் டபிள்யூ. டி.ஏ. டென்னிஸ்

# சிம்பு?''

டோர்னமெண்ட்டுகள் எதுவும் நடப்பதில்லையே" என்று சிணுங்கியவரிடம் தீபாவளிக் கொண்டாட்டம் பற்றிக் கேட்டால், "பட்டாசு எல்லாம் வெடிக்கமாட்டேன். அன்றைக்கு முழுக்க என் தோழிகளோடு கொண்டாட்டமாக இருப்பேன். நிறைய ஸ்வீட்ஸ் சாப்பிடுவேன்'' என்று உற்சாகமானார்.

இதுவரை அமைதியாகப் பேசி வந்த சானியாவிடம் சமயம் பார்த்து அந்த 'ஹாட்'டான கேள்வியைக் கேட்டே விட்டோம்...

**ஆமாம், நீங்கள் எங்கள் ஊரைச் சேர்ந்த சிம்பு என்கிற நடிகருடன் ஒரு படத்தில் நடிக்கப்...**

அவ்வளவுதான்... "ஹூ ஈஸ் சிம்பு'' என்று ஒரு ஷாட் அடித்தாரே பார்க்கலாம்...

"சிம்புன்னு ஒரு நடிகர் இருப்பதே எனக்குத் தெரியாது. நான் தமிழ்ப் படங்களும் பார்க்கமாட்டேன். யார் இது மாதிரியான வதந்திகளைப் பரப்புகிறார்கள் என்றே புரியவில்லை. எரிச்சல்தான் வருகிறது. முதலில் எல்லோரும் ஒன்றை புரிந்துகொள்ள வேண்டும். நான் ஒன்றும் சினிமா ஸ்டார் அல்ல. பரபரப்புகளும் புகழ் வெளிச்சமும் எனக்குத் தேவையே கிடையாது. நான் ஒரு விளையாட்டு வீராங்கனை. மைதானத்தில் எனது ஆட்டத்தை யாருமே பார்க்காமல் போனாலும் என்னால் முனைப்புடன் விளையாட முடியும். சிறு வயதிலிருந்து பல தியாகங்கள் செய்து, 'இந்தியாவைச் சேர்ந்த சானியா மிர்சா' என்கிற பெருமையான முத்திரையுடன் நாட்டுக்காக வியர்வை சிந்தி வருகிறேன். வேறுவழியின்றி விளையாட்டு செலவுகளை ஈடுகட்டவே விளம்பரங்களில் நடிக்கிறேன். மற்றபடி தமிழில் மட்டுமல்ல, வேறெந்த மொழிப் படங்களிலும் ஒரு காட்சியில்கூட நான் தோன்றமாட்டேன். இது உறுதி'' என்றார் ஆணித்தரமாக.

- ச.ந.கண்ணன்

படம் : ஸ்ரீஹரி

ஒரு பொக்கிஷம்!

# திருவழுந்தூர் சிவக்கொழுந்து

## அமரர் கல்கி



இரவு எட்டு அடித்து முப்பதாவது நிமிஷம் ரயில் ஐயம்பேட்டை ஸ்டேஷனில் வந்து நின்றது. பளிச்சென்று வீசிய மின்னலில் ஸ்டேஷன் கட்டடம், பிளாட்பாரம், அப்பால் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்கள் எல்லாம் ஒரு கணம் தெரிந்து, அடுத்த கணத்தில் மறைந்தன. மின்னலுக்குப் பிறகு இருட்டு முன்னைவிடப் பதின்மடங்கு அதிகமாகத் தோன்றிற்று. மினுக்மினுக் கென்று தோன்றிய ஸ்டேஷன் லாந்தர், அந்த இருட்டை எடுத்துக் காட்டுவதற்காகப் போட்ட வெளிச்சமாக காணப்பட்டது. 'நீ என்ன என்னை எடுத்துக்காட்டுவது?' என்று இருள் கோபங்கொண்டு அந்த லாந்தரை அமுக்கிக் கொன்றுவிடக் கவிந்து வருவது போலிருந்தது.

சில பேர் ரயிலில் ஏறிவிட்டால் உடனே அவர்கள் கண்ணைச் சுற்றத் தொடங்கிவிடுகிறது. வண்டி இரண்டு அசைப்பு அசைந்ததும் தூங்க ஆரம்பித்து விடுகிறார்கள். ஆனால் எனக்கு ரயிலில் தூங்க முடிவதே இல்லை. அதிலும் இடியும் மின்னலுமாய் இருந்த அந்த இரவில் தூக்கம் எப்படி வரப் போகிறது? ராத்திரி முழுவதும் ரயிலில் கழித்தாக வேண்டுமே என்று கவலையாயிருந்தது.

ஒரு கதைப் புத்தகத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தேன். ரயிலின் ஆட்டத்தில் படிப்பதும் சுலபமாக இல்லை. இந்த நிலைமையில் "ஐயம்பேட்டை! ஐயம்பேட்டை!" என்ற போர்ட்டரின் குரலைக் கேட்டதும் சாத்தியிருந்த ஜன்னல் கதவுகளைத் திறந்து வெளியே பார்த்தேன். கதவைத் திறக்கும் போதே 'தவுல் கந்தப்பனுக்கு இந்த ஊர்தானே?' என்ற நினைவு எழுந்தது.

ஐயம்பேட்டை கந்தப்பன் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். ஏனென்றால் அவருடைய ஊரையும் பெயரையும் நான் மாற்றியிருக்கிறேன். இந்தப் பெயர் பெற்ற தவுல் வித்வானை நந்திதேவரின் அவதாரம் என்றே சிலர் சொல்வார்கள். அவர் தவுல் வாசித்தால் அது கேவலம் தவு

லாக இராது. தேவதுந்துபி என்று சொல்லும்படியாகத்தான் இருக்கும். ஒரு சமயம் புதுக்கோட்டை தக்ஷிணா மூர்த்திப்பிள்ளை இவருடைய தவுல் வாசிப்பைக் கேட்டாராம். உடனே தம்மிடமிருந்த மிருதங்கம், கஞ்சிரா அவ்வளவையும் உடைத்து எறிந்து விட்டு, ஆறுமாத காலம் தோல் வாத்தியத்தையே தொடாமல் இருந்தாராம்.

அவ்வளவு சிறந்த தவுல் வித்வான் ஐயம்பேட்டைக் கந்தப்பன். அதோடு தேசிய விஷயங்களில் அதிக சிரத்தையுள்ளவர்.

கதர்தான் கட்டுவார். காங்கிரஸ் மாநாடுகளில் அவரை அடிக்கடி பார்த்திருந்ததுடன், ரொம்ப ரசமாகப் பேசக்கூடியவர் என்றும் தெரிந்து கொண்டிருந்தேன். ஆகையினால்தான் அவரைப் பற்றிய நினைவு உண்டாயிற்று. 'ஒருவேளை கந்தப்பன் தப்பித் தவறி இதே வண்டியில் வந்து ஏறினால், இராத்திரிப் பொழுதுபோவது தெரியாமல் போகுமல்லவா?' என்று எண்ணினேன்.



இப்படி எண்ணியதுதான் தாமதம்... இரண்டு மூன்று பேர் பிளாட்பாரத்தில் அவசர அவசரமாக நடந்து வருவது தெரிந்தது. யார் என்று உற்றுப் பார்த்தேன். முதலில் வந்த ஆசாமி, தவுல் கந்தப்பன்தான்! இதைப் பற்றி நான் ஆச்சரியப்பட்டு முடிவதற்குள்ளாக நானிருந்த வண்டியின் கதவு திறக்கப்பட்டது. கந்தப்பபிள்ளை உள்ளே ஏறினார். பின்னோடு வந்தவர்கள் இரண்டு தவுல்களையும் பெட்டி படுக்கைகளையும் வண்டியில் ஏற்றினார்கள்.

"எல்லா சாமானும் வந்துடுத்தா?"

"எல்லாம் வந்துடுத்துங்க."

"சரியா இருக்கா, பார்த்திடுங்க?"

"போய்ட்டு வரீங்களா தம்பீ!"

"போய்ட்டு வரோம், அண்ணே!"

"ஓடு! ஓடு! வண்டி கிளம்பிட்டுது. பக்கத்து வண்டியிலே ஏறிக்கோ! விழுப் புரத்திலே தூங்கிடாதே! தெரியுதா?"

ரயில் நகரத் தொடங்கியது. ஒரு நிமி ஷத்திலே ஸ்டேஷன் விளக்கு மறைந் தது. காடாந்திரமாகக் கவிந்திருந்த இரு ளைக் கிழித்துக்கொண்டு ரயில் துரித மாகச் சென்றது.

"என்ன, கந்தப்பபிள்ளை? சௌக் கியமா?" என்று கேட்டேன்.

கந்தப்பபிள்ளை திடுக்கிட்டு, என்னைத் திரும்பிப் பார்த்தார். "சாமி நீங்களா? சௌக்கியந்தானுங்க. உங் களைப் பார்த்தது ரொம்ப சந்தோஷம்" என்றார்.

"உம்மைப் பார்த்தது எனக்கு அதைவிட சந்தோஷம். ஒரு வேடிக்கையைக் கேளுங்கள். ஜயம் பேட்டை ஸ்டேஷனில் வண்டி நின் றதும் உம்மை நான் நினைத்துக்கொண் டேன். தப்பித் தவறி இதே வண்டியில் நீரும் வந்து ஏறினால் எவ்வளவு நன் றாய் இருக்கும் என்று எண்ணினேன். அடுத்த நிமிஷம் பார்த்தால் நீரே வந்து இந்த வண்டியில் ஏறுகிறீர். நாளைக்கு சென்னை பட்டினத்தில் என் ஸ்நேகி தர்களிடம் நான் சொன்னால் நம்பவே மாட்டார்கள். 'இயற்கைக்கு விரோதம்' என்பார்கள்" என்றேன்.

"எந்த இயற்கைக்கு விரோதம், ஸ்வாமி!" என்று கந்தப்பபிள்ளை கேட்



டார்.

"இது என்ன கேள்வி! எந்த இயற்கைக்கு விரோதம் என்றால்?"

"இல்லை, ஐயா! இப்போது பாருங்கள். இந்த ரயில் இருக்கிறது. தண்டவாளத்தில் ஓடுவது இதன் இயற்கை. அந்த இயற்கையை நம்பித்தான் நாம் எல்லோரும் ரயிலில் ஏறுகிறோம். ஆனால் திடீரென்று எப்போதாவது ஒரு தடவை ரயில் தண்டவாளத்திலிருந்து இறங்கிவிடுகிறது. அதனால் விபத்து நேரிடுகிறது. இந்த விபத்தை நேரில் பார்க்காதவர்கள் 'அதெல்லாம் இல்லை. அப்படி ஒரு நாளும் ரயில் தண்டவாளத்தை விட்டு நகர்ந்திராது. இயற்கைக்கு விரோதம்' என்று சொல்லலாம் அல்லவா?"

இதற்கு என்ன பதில் சொல்வதென்று நான் யோசிப்பதற்குள் அவர் மேலே பேசத் தொடங்கிவிட்டார்.

"இதோ கேளுங்கள். வானத்தில் இடி இடிக்கிறது. இந்த ஐந்து நிமிஷத்தில் பத்து இடி இடித்துவிட்டது. இம்மாதிரி உலகத்தில் தினம் பதினாயிரம், லக்ஷம் இடி இடித்துக் கொண்டுதானிருக்கிறது. அந்த இடியெல்லாம் பூமியின் மேல் விழுந்தால், இந்த உலகத்திலே ஒரு மனுஷன், ஒரு பிராணி உயிரோடு இருக்க முடியுமா? முடியாது. ஆகையால், இடி இடித்துவிட்டு ஆகாயத்திலே மறைந்து விடுவதுதான் இயற்கை. ஆனால் எப்போதோ ஒரு தடவை இடியானது பூமியின் மேல் விழுகிறது. அதுவும் ஒரு மனுஷன் மேல் விழுகிறது. அந்தப் பாழும் இடி அவனைக்



கொல்லாமல் அவன் கண்ணை மட்டும் கொண்டு போய்விடுகிறது! இதற்கு என்ன சொல்கிறீர்கள், ஸ்வாமி! இது இயற்கையா? இயற்கைக்கு விரோதமா?"

இப்படிக் கேட்டுவிட்டு கந்தப்பன் என்னைப் பார்த்தார். நானும் அவரைப் பார்த்தேன். வேறு எனக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை.

"என்ன சாமி, பேசாமல் இருக்கிங்க? சொல்லுங்களேன்? இடி விழுகிறது இயற்கையாய் இருந்தால், நம் எல்லோர் தலையிலும் ஏன் இடி விழவில்லை? நம் எல்லார் கண்ணும் ஏன் அவிந்து போகவில்லை? அது இயற்கைக்கு விரோதமாய் இருந்தால் ஒருத்தர் மேல் மாத்திரம் எப்படி விழுந்திருக்கும்! அவர் கண் மட்டும் எப்படிப் போயிருக்கும்? இது நடக்கக் கூடியதா ஸ்வாமி? நடக்கக் கூடியது இல்லாவிட்டால் எப்படி நடந்தது?"

கந்தப்ப பிள்ளையின் அப்போதைய அறிவுத் தெளிவைப் பற்றி எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. தஞ்சாவூர் ஜில்லாவில் இன்னும் மதுவிலக்குச் சட்டம் வரவில்லை என்பது ஞாபகம் வந்தது. ஒருவேளை... அப்படி இருக்குமா? சே! சே! ஒருநாளும் இல்லை. அவர் அந்த ஊர் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர். காந்திக் குல்லா போட்டுக்கொண்டு கள்ளுக்கடை மறியல் செய்தவர். அப்படிப்பட்ட மனுஷரா மதுபானம் செய்திருப்பார்? இல்லவே இல்லை.

பின்னே, ஏன் இப்படி என்னவெல்லாமோ சம்பந்தமில்லாமல் பேசுகிறார்? இடியாவது? தலையில் விழுவதாவது? இயற்கைக்கு விரோதமாவது? எல்லாம் சர்வபேத்தலாக அல்லவா இருக்கிறது?

பேச்சை மாற்றுவதற்காக நான், "பட்டணத்துக்குத்தானே வருகிறீர்கள்? அங்கே நாளைக்குக் கச்சேரியாக்கும்! கல்யாணக் கச்சேரியா?" என்று கேட்டேன்.

"ஆமாம் சாமி! நாளைக்குப் பட்டணத்திலே கச்சேரிதான்" என்றார் கந்தப்பபிள்ளை.

இப்படிச் சொல்லிவிட்டு, தவுலை எடுத்துப் பக்கத்தில் வைத்துக் கொண்டார். அதன் உறையை அவிழ்த்தார். தவுலின் இரண்டு புறத்தையும் தடவிக் கொடுத்தார். ஒரு தாயார் தன்னுடைய குழந்தையின் அழகான கன்னங்களைத் தடவுவது போல் அவ்வளவு செல்லமாகத் தடவினார்!

மனுஷர் இந்த ரயில் வண்டியில் தனித்தவுல் கச்சேரி ஆரம்பிக்கப் போகிறாரா என்ன? தூக்கம் வருகிறதற்கு நல்ல உபாயந்தான்! - இப்படி நினைத்து மனத்திற்குள் சிரித்துக்கொண்டேன். அப்போது அவர் சொன்னார்:

"சாமி! நானும் தினம் பொழுதுவிடிந்தால் தவுல் அடித்துக் கொண்டுதானிருக்கிறேன். எத்தனையோ நாதஸ்வர வித்வான்களுக்கு வாசித்திருக்கிறேன். ஆனால் நேற்றைக்கு ராத்திரி நான் பரவசமாய் வாசித்தது போல் வாசித்தது வெகு அபூர்வம். இந்தத் தோல் வாத்தியத்திலிருந்து நேற்று என்னெல்லாம் நாதங்கள் வந்தன? நானா வாசித்தேன்? இல்லை, இல்லை. நந்தி பகவானே, என் விரல்களிலே வந்து உட்கார்ந்து கொண்டார்!"

**'உலகம் தாங்காது. எல்லோரும் பைத்தியம் பிடித்துப் போய் விடுவார்கள்!'**





## 'நானா வாசித்தேன்? நந்தி பகவானே என் விரல்களில் வந்து உட்கார்ந்து கொண்டார்!'

இதைக் கேட்டதும் அவருடைய பேச்சில் எனக்கு சிரத்தை உண்டாயிற்று. சற்றுமுன் அவர் தலைகால் இல்லாமல் பேசியதெல்லாம், முதல்நாள் கச்சேரியின் ஆவேசந்தான் என்று அறிந்துகொண்டேன்.

"அப்படியா? எந்த ஊரிலே ஐயா, அவ்வளவு நல்ல கச்சேரி? நாயனம் யார் வாசித்தது?" என்று கேட்டேன்.

"திருவழுந்தூர் சிவக்கொழுந்து என்று கேட்டிருக்கிறீர்களா, சாமி?"

"திருவழுந்தூர் சிவக்கொழுந்தா? அது யார்? நான் கேட்டதில்லையே?" என்றேன்.

வெகு காலத்துக்கு முன்பு சிவக்கொழுந்து என்று பிரசித்தி பெற்ற நாயனக்காரர் இருந்ததாக நான் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் அவர் நான் பிறப்பதற்கு முன்னாலேயே காலஞ்சென்ற மனிதர். அவருக்கு திருவழுந்தூருமில்லை!

"கேட்டதே இல்லையா? நினைத்துப் பாருங்க சாமி. 1929-30 இல் நீங்க எங்க இருந்தீங்க?"

"ஓஹோ! 1929-30லா? பாதி நாள் சர்க்கார் விருந்தாளியா இருந்தேன். பாக்கிப் பாதிநாள், சேலம் ஜில்லாவில் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வெகு தூரத்திலுள்ள கிராமத்தில் இருந்தேன்."

"சரிதான்; அதனால்தான் நீங்கள் கேள்விப்படவில்லை. திருவழுந்தூர்த் தம்பி அந்த இரண்டு வருஷ காலம்தான் பிரசித்தமாயிருந்தது. ஆனால் அந்த இரண்டு வருஷத்திலேயே அது சங்கீத உலகத்தையே ஜயித்துவிட்டது."

எனக்குப் பகீர் என்றது. கலை உலகில் மகாமேதாவிகளாகக் கிளம்பும் சிலர் அற்பாயுஸிலே இறந்து விடுவது சகஜமாயிருக்கிறதல்லவா? உடனே, கிட்டப்பாவின் ஞாபகம் எனக்கு வந்தது.

"ஐயோ, பாவம்! கிட்டப்பா மாதிரி..."

"இல்லீங்க சாமி, இல்லீங்க! உங்கள் வாயாலே, அப்படிச் சொல்லாதீங்க. தம்பி தீர்க்காயுஸா இருக்கட்டும்னு சொல்லுங்க."

"ரொம்ப சந்தோஷம், ஐயா! தீர்க்காயுளாய், சிரஞ்சீவியாய், என்றும் பதினாறாய், மார்க்கண்டனைப் போலிருக்கட்டும். ஆனால், அவர் பெயர் ஏன் இப்போது மறைந்து போச்சு? ஏன் அவர் வாத்தியம் வாசிக்கிறதில்லை?"

"ஏன் வாசிக்கிறதில்லை? வாசித்தால் உலகம் தாங்காது. எல்லாரும் பைத்தியம் பிடித்துப் போய் விடுவார்கள். அதனால்தான் நான்கூட அடிக்கடி தம்பியைப் பார்க்கப் போகிறதில்லை. நேற்று ராத்திரி அது வாசித்துக் கேட்டேன். அப்போது முதல் வெறி பிடித்தது போலிருக்கு. தவுலைக் கிழித்து எறிந்து விட்டு, 'இனிமேல் ஒருத்தனுக்கும் தவுல் வாசிக்கிறதில்லை' என்று சபதம் பண்ணத் தோன்றுகிறது. அடாணா ராகம் ராத்திரி வாசிச்சது பாருங்கள்! ஒருநிமிஷம் எனக்குக் கண்ணிலே ஜலம் வந்தது. மறுநிமிஷம் எழுந்து ஆனந்தக் கூத்தாடலாம் என்று தோன்றிற்று. அதை நினைக்கும்போதே மயிர்க்கூச்சல் எறிகிறது."

கதையை அடியே பிடித்துச் சொல்லும்படி நான் ரொம்பவும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டதன் பேரில் தவுல் கந்தப்ப பிள்ளை சொல்லத் தொடங்கினார்.

(தொடரும்)

# கண்களின் நிறைவு... உள்ளத்தின் நெகிழ்வு!

சக்சஸ் ஸ்டோரி



**கடந்த இருபத்தைந்து வருடங்களாக டூவீலர் சேல்ஸ் - சர்வீஸ் - ஸ்பேர் பார்ட்ஸ் தொழிலில் சென்னை நகரில் கொடிகட்டிப் பறந்து கொண்டிருக்கும் நிறுவனம் ராம்கே டி.வி.எஸ். அடையாறுக்கு அடுத்து தற்போது வேளச்சேரியிலும் தங்களது புதிய கிளையை நிறுவியுள்ளனர். அதன் நிர்வாக இயக்குநர் மனோகரன், தமது வெற்றியின் ரகசியங்களை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...**

### லைசென்ஸ்

சென்னையிலேயே பிறந்து வளர்ந்தவன் நான். அமெரிக்கா சென்று எம்.எஸ். படித்து, ஏதாவதொரு பெரிய கல்லூரியில் பேராசிரியராக பணியாற்றலாம் என்று கனவு கண்டிருந்தேன். ஆனால், அப்பாவின் கடின உழைப்பு, அவர் வாழ்க்கையை திசை திருப்பிய தோடு, என்னையும் அதில் இழுத்துக் கொண்டது. கம்ப்யூட்டர் கோர்ஸ் படித்துக் கொண்டிருந்த என்னை ஒரு நாள் அப்பா அழைத்து, "மனோகரா நீயும் வந்து நம்ம பிஸினஸ்ல சேர்ந்துக்கோ" என்றார். தலையசைத்தேன். அடுத்த நொடி, என் உலகம் மாறத் தொடங்கியது.

### கிக் ஸ்டார்ட்

அப்பா ராஜசேகர், டி.வி.எஸ். கம்பெனியின் மெட்ராஸ் மோட்டார்ஸ் ஜெனரல் இன்ஷூரன்ஸ் பிரிவில் பணியாற்றியவர். இரண்டு சக்கர வாகனங்களின் தொழில்நுட்பங்களை நன்கு அறிந்தவர். 80-ம் வருடம் அவர் அங்கிருந்து ஓய்வு பெற்றபோது, அவருக்கும் கம்பெனிக்குமான உறவை முறித்துக்கொள்ள டி.வி.எஸ். நிர்வாகம் விரும்பவில்லை. கம்பெனியின் வளர்ச்சியில் அப்பாவின் உழைப்பும் அடங்கியிருந்ததால், அதற்குக் கைமாறாக சென்னை தெற்குப் பகுதி டி.வி.எஸ். டீலர்ஷிப்பை அப்பாவுக்கு வழங்கினார்கள். தாமாக வந்த வாய்ப்பை அப்பாவும் ஏற்றுக் கொண்டு, ஓய்வு பெற்றபோது கிடைத்த கிராஜுவிட்டி பணமான ரூபாய் எண்பதாயிரத்தில், அடையார் பகுதியில் சிறிய டி.வி.எஸ். ஷோரூமை தொடங்கினார். அதற்கு முன்பே ஸ்கூட்டர் புழக்கத்தில் இருந்தாலும் அடித்தட்டு மக்களிடமும் இரண்டு சக்கர வாகனங்கள் பரவ வேண்டும் என்கிற நோக்கத்தில் 80-ம் வருடம் டி.வி.எஸ். 50 மொபெட் அறிமுகப்படுத்தப்பட்டது. முதல் வண்டியை எங்கள் ஷோரூமிலிருந்துதான் விற்றோம். முதன்முதலில் 21 மொபெட்கள்தான் எங்களுக்கு வழங்கப்பட்டன. ஆனால், மக்களின் தேவையைத்தான் உடனடியாகப் பூர்த்தி செய்ய முடியவில்லை. இருநூற்று ஐம்பது ரூபாய் கொடுத்து பதிவு செய்து ஏழு மாதம் வரையெல்லாம் காத்திருந்து வாங்கினார்கள். அதுவரைக்கும் எங்கள் குடும்பத்தில் யாரும் வியாபாரம் செய்து பார்த்ததில்லை. அப்பாவின் முதல் முயற்சியே குறுகிய காலத்தில் வெற்றியை நோக்கி நகர ஆரம்பிக்க, துணைக்கு நானும் 82ம் வருடம் அப்பாவுடன் இணைந்து கொண்டேன்.

### ஃபர்ஸ்ட் கியர்

டி.வி.எஸ். டீலர்ஷிப் வைத்திருந்ததால்




● மனோகரன்

நாங்கள் வேறு எந்த ப்ராண்டட் வண்டிகளையும் விற்க முயற்சிக்கவில்லை. 'உங்கள் ஷோரூமில் எங்களுடைய வாகனங்களையும் விற்றுத் தாருங்கள்' என்ற பலரின் வேண்டுகோளையும் இன்றுவரை தீர்த்து வைக்க முடியாமல்தான் இருக்கிறோம். இது தவிர ராம்கே பெயரில் கார், ட்ராக்டர்கள், ஏன் வாட்சுகளுக்கான டீலர்ஷிப் உரிமையைக்கூட பலரும் தர முன்வந்தனர். ஆனால் எதற்கும் நாங்கள் அசைந்து கொடுக்கவில்லை. எங்கள் கவனம் வேறு திசைகளில் திரும்பினால் டி.வி.எஸ். நிர்வாகம் ராம்கே மீது வைத்திருக்கும் நம்பிக்கை அசைந்துவிடும் என்று எண்ணினோம்.

84-ம் வருடம் டி.வி.எஸ். 'சுசுகி' பைக்குகள் அறிமுகமாயின. 88-ல் அதன் விற்பனை பன்மடங்கு கூடியது. காரணம், அந்தச் சமயத்தில்தான் தவணைமுறை திட்டம் புதிதாக நடைமுறைக்கு வந்தது. மொபெட், பைக்குகளின் விலை ஏறத் தொடங்கியதால் மக்களால் முழுத் தொகை கொடுத்து வாங்க முடியாத நிலையில், தவணை முறை அவர்களுக்குக் கைகொடுத்தது. நாளடைவில் இதில் மேலும் பல திட்டங்கள் உருவாகி, ஒரு ரூபாய் கட்டிவிட்டு (!) வண்டியை எடுத்துச் செல்லும் அளவுக்கு தவணைமுறைத் திட்டம் 'டூவீலர் சேல்ஸ்' பிஸினஸில் பெரியதொரு மாற்றத்தை ஏற்படுத்தியது. இன்றைக்கும் ஸ்கூட்டி போன்ற வண்டியை, தந்தை தம் மகளுக்குப் பரிசாகத் தரும்போதுதான் முழுத் தொகையையும் கட்டுகிறார்கள். மற்றபடி எண்பது சதவீத டூவீலர் பிஸினஸ், இதுமாதிரியான தவணைமுறை திட்டங்களினால்தான் ஜரூராக நடைபெறுகிறது. 80-ம் ஆண்டில் ஆரம்பித்த பிஸினஸ், 88-ம் வருடம் அடுத்த கட்டத்தை அடைந்தது. தவணை முறைத் திட்டம் பெரிய வெற்றிபெற, அந்த வருடம் மட்டும் 20 கோடிக்கு வியாபாரம் செய்தோம்.

## செகண்ட் கியர்

பேருந்துகளில் இடிபட்டு, மிதிபட்டு பயண அவஸ்தையை அனுபவித்து வந்த பெண்களுக்கு 94-ம் வருடம் அறிமுகப் படுத்தப்பட்ட டி.வி.எஸ். ஸ்கூட்டி ஆபத்பாந்தவனாக விளங்கியது. சைக்கிள் ஓட்டத் தெரியாத பெண்கள்கூட கியர் தொல்லை இல்லாத ஸ்கூட்டியை ஓட்டத் தொடங்கினார்கள். நாங்களும்




பெண்களுக்கு இலவச பயிற்சியளித்து, லைசென்ஸ் வாங்கவும் உதவி புரிந்தோம். அந்தக் காலகட்டத்தில் ஸ்கூட்டர்கள் மீதான மோகம் குறைந்து பெருவாரியான மக்கள் பைக்குகளை வாங்கத் தொடங்கினார்கள். அப்பொழுது அறிமுகப்படுத்தப்பட்ட 'சாமுராய்' பைக் விற்பனை எகிறத் தொடங்கியது. 99-ம் வருடத்தில் இன்னொரு புரட்சியும் டூவீலர் பிஸினஸில் ஏற்பட்டது.

பழைய பைக், ஸ்கூட்டர்களை வைத்திருப்பவர்கள் அதைத் தூக்கி வீசவும் முடியாமல், தங்கள் வேகத்துக்குப் பயன்படுத்தவும் முடியாமல் திணறிய போது, 'எக்ஸ்சேஞ்ச் ஆஃபர்' புது திருப்பத்தை உண்டு பண்ணியது. 99க்குப் பிறகு டூவீலர்கள் அதிகமாக சாலையில் தென்படுவதற்கு இந்தத் திட்டமும் ஒரு காரணம். முன்பெல்லாம் பைக்குகள் நடுத்தர வயதினருக்கு ஏற்றாற்போல் வடிவமைக்கப்பட்டன. ஆனால், இன்று முற்றிலும் அது இளைஞர்களுக்கான வாகனமாகிவிட்டது. பைக்குகளில் ஹீரோ ஹோண்டா முதலிடம் வகிக்க, டி.வி.எஸ்.ஸும் பஜாஜும் அடுத்த விருப்பமாக உள்ளன. ஒவ்வொரு மாதமும் எங்களிடம் பைக்குகள் மட்டும் ஆயிரத்து ஐந்நூறுக்கும் அதிகமாக விற்பனையாகின்றன. சென்னையில் மட்டும் மாதமொன்றுக்கு அதிகபட்சமாக பதினான்காயிரம் பைக்குகள் விற்கப்படுகின்றன.

**சர்வீஸ்**

ஆரம்பத்திலிருந்தே சர்வீஸ் மற்றும் ஸ்பேர் பார்ட்ஸ் பிஸினஸிலும் ஈடுபடுகிறோம். அடையார் கிளையில் மட்டும் மாதத்துக்கு 4,500 வண்டிகளுக்கு சர்வீஸ் செய்கிறோம். பல ஆயிரங்கள் செலவழித்து வாங்கிய பைக்கை சர்வீஸ் செய்வது தரமானவர்களாக இருக்க வேண்டுமென்கிற எண்ணத்தில் தான் வாகன ஓட்டிகள் எங்களைத் தேடி வருகிறார்கள்.

சிங்கப்பூர் நிறுவனமொன்று எடுத்த சர்வேயின்படி கஸ்டமர் திருப்தியில் ராம்கே டி.வி.எஸ். முதலிடத்தில் உள்ளது. தென்னிந்தியாவில் ஐ.எஸ்.ஓ. 9001-2000 சான்றிதழ் வாங்கிய முதல் டீலர் நாங்கள்தான். நாளுக்கு நாள் வளர்ச்சி பெறும் இத்தொழிலில், சென்ற வருடம் நாங்கள் 65 கோடிக்கு வியாபாரம் செய்துள்ளோம். அடுத்து, மூன்றாவது தலைமுறையாக, இன்ஜினீயரிங் படிக்கும் என் மகளும் இத்தொழிலில் இறங்க உள்ளார்.

என்னைப் பொறுத்தவரை நான் வியாபாரியே கிடையாது. கஸ்டமர்களை நண்பர்களாகத்தான் பாவிக்கிறேன். வாகனம் வாங்கி முடித்து திருப்தியுடன் புறப்படுகையில், அவர்களின் கண்களில் தெரியும் நிறைவில்தான் இருக்கிறது எங்களது உள்ளத்தின் நெகிழ்வு. ஆம்... அதுதான் இத்தனை வருடங்களில் நாங்கள் சம்பாதித்த பெரிய சொத்து.

- சநகன்

படங்கள் : ஸ்ரீஹரி

இது புதுசு!

# சொந்தங்கள்

மனநல ஆலோசகர்
பிருந்தா ஜெயராமன்

இப்போதெல்லாம் நமக்கு வாடிக்கையாகிவிட்டவை:

- வாயிற்கதவைப் பூட்டியதும் மறந்துபோன ஒன்று நினைவு வர, அவசரமாகத் திறந்து, தேடி எடுத்து பூட்டிவிட்டுக் கிளம்புவது.
- குடும்பத்தில் உள்ள மூவரது ஆறு போன் நம்பர்களை 'மொபைலில்' போட்டுவிட்டு தப்பான நம்பரைத் தட்டிவிட்டு அசடு வழிவது.
- வீடு திரும்பும்போதே 'மொபைலில்' பேசிக்கொண்டே நுழைய, ஒரு கப் காபிக்கு வழியில்லாமல் திண்டாடுவது.
- 'பின் நம்பரை' 'மைக்ரோவேவ் அவனி'ல் போட்டுத் தவிப்பது.
- நாம் லேட்டாகப் போகும் நாள் பார்த்து 'பாஸ்' சீக்கிரம் வந்து உட்கார்ந்துகொண்டு நம்மை முறைப்பது
- 'ஹோம்வொர்க் பண்ணித்தா' என்று குழந்தை அலற, 'அம்மா கீழே விழுந்து, அடிபட்டு, ஹாஸ்பிடலில் சேர்த்திருக்கோம்' என்று தொலைபேசியில் தங்கை அழ, 'லேட்டாச்சே, அந்த முகடு கத்தப் போகுது' என்று கணவன்/மனைவி வள்ளென்று விழுவது.

உண்டா, இல்லையா உங்கள் வீட்டில்?

இப்படி வினைத் தந்தி மாதிரி முறுக்கேறி தினசரி வாழ்வில் ஓடிக்கொண்டிருக்கையில், அந்த வேகத்துக்குப் பலியாவது உறவுகள்தான். 'எந்த உறவுதான் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கிறது?' 'நேற்று நன்றாக இருந்த உறவு, இன்று ஏன் கசக்கிறது?' 'சிலர் சுயநலவாதிகளாக, பிறர் கஷ்டம் தெரியாமல் நடந்து கொள்கிறார்களே, ஏன்?' இவையெல்லாம் நாம் தினமும் கேட்கும் புலம்பல்கள்தானே? பல 'ஏன்'களை இப்படி அடுக்கிக்கொண்டே போகலாம். பலன் என்ன? நாம் புழுங்கித் தவிப்பதுதான் நடக்கும். ஒரேயடியாக நாம் புழுங்கத் தேவையில்லை. உறவுகளை வாழ வைப்பது மட்டும் இத்தொடரின் நோக்கமல்ல... அதில் நம் பங்கேற்பும் முக்கியம் என்பதை வெளிச்சம் போட்டுக் காட்டுவதும்தான்!

'உறவுகள்' என்ற சொல்லுக்குப் பல விதமான விளக்கங்களைச் சொல்லலாம்:

- மொழி அகராதியில் உறவுக்குப் 'பிணைப்பு', 'தொடர்பு' என்று பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. கடுகளவான வார்த்தைகளானாலும், அவற்றின் பரிமாணங்களை அறுதியிட்டுக் கூற முடியாது.
- சமுதாயத்தின் கணிப்பில், உறவுகள் சமுதாயத்தைத் தூக்கி நிறுத்தும் தூண்கள். உறவுகள் ஆரோக்கியமாக இருந்தால், சமுதாயம் மேம்படும்.
- விஞ்ஞான ரீதியாகப் பார்த்தால் மூளை, நரம்புமண்டலம் இவற்றுக்கிடையே உள்ள கைகோர்ப்புதான் உறவு. இவை இரண்டிற்கும் இடையே ஏற்படும் செயல்பாட்டின் வேதியியல் விளைவுகள்தான் மனிதர்களின் எண்ணங்களும், உணர்வுகளும் என்று நரம்பியல் நிபுணர்கள் சொல்கிறார்கள்.
- வேதாந்தம் 'எல்லா உறவும் அநித்தியம்; அவை ஒரு தாற்காலிக ஊன்றுகோல்' என்று அழுத்தமாகச் சொல்கிறது. ('அதெல்லாம் வயதானப்புறம்



படம்: யோகா

பாத்துக்கலாம்' என்று ஒதுக்க வேண்டாம்; வாழ்க்கையை எப்படி வாழ்வது என்பதை வயதான பிறகா கற்றுக் கொள்வது? பயம் வேண்டாம். நான் வேதாந்த விரிவுரை அளிக்கப் போவதில்லை!)

● பொருளாதாரக் கண்ணோட்டத்

உணர்வுகள் வருகின்றன. 'என் அம்மாவுக்கு என்னிடம் நிறைய பாசம் உண்டு; நான் சரியாகப் படிக்காததால்தான் கோபிக்கிறார்' என்று நினைக்கும் விடலைகள் புண்பட்டுப் போவதில்லை. 'இந்த வீடு நரகம்; சதா என்னை நச்சரிக்க ஒரு அம்மா;




தில் (!) உறவுகள் ஒரு லாப, நஷ்டக் கணக்கு! ஓர் உறவு நமக்கு இதமாக இருக்கும்வரை, சந்தோஷத்தைக் கொடுக்கும்வரை பிடிக்கிறது. இது லாபம்! எந்த உறவு நம்மை மேலும், மேலும் புண்படுத்துகிறதோ 'பலூனி'ல் ஊசி குத்தினாற் போல நமது உற்சாகங்களைக் குறைத்து, மனதை ரணகளமாக்கி விடுகிறதோ, அதை நஷ்டக் கணக்கில்தானே எழுத முடியும்?

● சுருக்கமாகச் சொல்லப் போனால் உறவுகள் நமது மனம் சம்பந்தப்பட்டவை. (உளவியல் ரீதியாகப் பார்த்தால்) எண்ணங்கள், உணர்வுகள், இவற்றின் வெளிப்பாடு. எண்ணங்களிலிருந்துதான்

மட்டம் தட்ட ஒரு அப்பா.' இப்படி நினைக்கும் விடலைகளுக்கு மனச்சோர்வு ஏன் வராது?

**ம**னம் எங்கு இருக்கிறது என்பதிலும் விளக்கங்கள் பல! ஒரேயடியாய்க் குழப்புகிறேனா? குழம்பினால்தானே தெளிவு வரும்? இருக்குமிடம் தெரியாமல் இருந்து கொண்டு நம்மை இந்த அளவுக்கு மனம் ஆட்டிவைப்பதை நினைத்தால் வியப்பாக இல்லை? திருமணத்துக்குப் பின் மனைவி மாறமாட்டாள் என்று கணவனும், கணவனைப் பிறகு மாற்றிக் கொள்ளலாம்

## மெடிக்கல் மூலை



இருதயம் சீராக இயங்குவதற்கும், இரவு நன்றாக உறங்குவதற்கும் மிளகாய் பெருமளவில் உதவுகிறது என்று ஆஸ்திரேலிய பல்கலைக்கழகம் கண்டுபிடித்துள்ளது. தினசரி உணவில் கணிசமான அளவுக்கு மிளகாயைச் சேர்த்துக்கொள்வது சிறந்தது என்றும் அவர்கள் பரிந்துரைத்திருக்கிறார்கள்.

- Rx

என்று மனைவியும் எதிர்பார்க்க, இரண்டும் நடக்காமல் போவதுதான் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. ஏன்?

கவிதாவும் ஆனந்தும் ஆறு வருடங்கள் உயிருக்குயிராகக் காதலித்து மணந்து கொண்டார்கள். திருமணமான உடனேயே பிரச்னைகள் ஆரம்பித்து விட்டன! "நானும் வேலைக்குப் போறேன், உன் தங்கை போவது மட்டும்தான் உன் அம்மாவுக்குத் தெரியுது" என்று அவள் வருத்தப்பட, "பெரியவங்களை எதிர்த்துப் பேசறது எங்கள் வீட்டிலே பழக்கமில்லே; நீதான் 'அட்ஜஸ்ட்' செய்துக்கணும்" என்று அவன் சொல்ல, "அப்போ, எங்க வீட்டிலே எதிர்த்துப் பேசுவோம்னு சொல்றியா? எங்களையெல்லாம் இப்படி அடிமைகளா எங்க வீட்டுல வளர்க்கலே! கல்யாணத்துக் கப்புறம் நீ ரொம்பவே மாறிட்டே!" என்று அவள் தொடர - ஒரு சண்டையின் ஆரம்பம்.

மனிதர்கள் மாறிக்கொண்டே இருப்பதுதான் இயற்கை. (மாற்றம் ஒன்றுதான் மாறாதது!) இதற்கு சூழ்நிலை மட்டும் காரணம் இல்லை; அந்த நேரத்தில் உள்ள நம் மனநிலையும்தான்! அதனால்தான் ஒரு முறை பயணம் செய்த ஆட்டோக்காரரிடம இரண்டு ரூபாய்க்கு மல்லுக்கட்டும் நாம், பின்னொருமுறை பயணம் செய்கையில் பத்து ரூபாயை மறுபேச்சு இல்லாமல் கொடுத்து விடுகிறோம். அன்றைய மனநிலை அப்படி! 'வர, வர எனக்குத் தொட்டதுக்கெல்லாம் ரொம்ப கோபம் வருது. நான் கோபப்படறவளே/னே இல்லை. ஏன் இப்படி மாறினேன்?" என்றும், 'முன்பெல்லாம் ரொம்ப தன்னம்பிக்கையோடு இருப்பேன்; ஏனோ தெரியலை இப்போதெல்லாம் எல்லாத்திலேயும் ஒரு தயக்கம் வந்திடுச்சு' என்றும், 'ஏன் இப்படி சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் இவ்வளவு கவலைப்படறேன்?' என்றும் நம் செயல்களுக்கு நமக்கே காரணம் தெரியாதபோது, பிறருக்கு எப்படிப் புரியும்.

நமது நடத்தைகளெல்லாம் நமது உள் உலகத்தின் (மனத்தின்) பிரதிபலிப்புதான்! வெளி உலகம் நம் உள் உலகத்தோடு ஒத்துப் போக வேண்டுமென்று விடாது முயற்சிக்கிறோம். நமது எண்ணங்கள், செயல்சள் எல்லாமே அதை நோக்கியே இருப்பதால், அது நடக்காதபோது சங்கடமாகிவிடுகிறது. ஒருகாலத்தில் இனித்த உறவு, பிறகு கசப்பது இந்த முயற்சியில் நாம் களைத்துப் போகும் போதுதான்.

உறவுகளைப் புரிந்துகொள்ள, மேம்படுத்திக் கொள்ள ஒரு சில 'டிப்ஸ்'ஐ நீங்கள் இந்தத் தொடரில் எதிர்பார்க்கலாம். 'சமையல் டிப்ஸ் மாதிரியா?' என்று கேட்டு விடாதீர்கள்! டிப்ஸை பயன்படுத்தும் விதத்தில் இருக்கிறது அதன் உபயோகத் திறன்! 'ஐயோ! தெரியாமல் மாட்டிக் கொண்டு விட்டோமே!' என்று தவிக்கிறீர்களா? மாட்டிவிட்டு வேடிக்கை பார்ப்பது என் நோக்கமல்ல! இத்தொடரில் உளவியலில் நான் கற்றுக்கொண்டு, எனக்கும்/என்னை அணுகியவர்களுக்கும் பலனளித்தவற்றை உங்களோடு பகிர்ந்து கொள்ளப் போகிறேன். பாலமாக வாழ்வோம்; தீவாக இருக்க வேண்டாமே!

(பேசுவோம்)

மாடல் படம் : ஸ்ரீஹரி



# வா...வா...வா... நீ வராங்காட்டி போ...போ...போ..!

நினைத்தபடியா வாழ்க்கை அமைந்துவிடுகிறது? அமைந்தபடிதானே வாழ வேண்டியிருக்கிறது.

இருந்தாலும், இப்படி ஒரு இக்கட்டான சூழ்நிலை வந்திருக்க வேண்டாம்.

"ஏன் வரமாட்டேன்னு சொல்ற?" என்று மீண்டும் கேட்டார் என் கணவர்.

எப்படி வர முடியும்? எனது முன்னாள் காதலன் மகேஷ், எங்கள் காதலை மையமாக வைத்து இயக்கிய திரைப் படத்தின் நூறாவது நாள் விழா, எங்கள் தியேட்டரில் நடக்கிறது. படத்தின் ஹீரோ ப்ரதீப், மகேஷ் என்று எல்லோரும் வருகிறார்கள். படத்தைப்





## இந்த வார காதல் கதை

பார்த்துவிட்டே இரண்டு நாட்கள் ரகசியமாக அழுது கொண்டிருந்தேன். மகேஷை நேரிலும் பார்த்தால்... அவ்வளவுதான்.

"வரலன்னா விடுங்களேன்" என்றேன்.

"நம்ம தியேட்டர்ல விழா நடக்குது. நம்ம ஊரு டைரக்டரு... ஹீரோ, ஹீரோயினெல்லாம் வர்றாங்க. ஊரே கொண்டாட்டமா இருக்கு. நீ வரமாட்டேன்னா நஷ்டம் உனக்குத்தான்... போ" என்று என் கணவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, "என்ன இங்க சத்தம்..." என்றபடி அறையினுள் நுழைந்தார் என் மாமனார்.

கட்டிலில் அமர்ந்திருந்த நான் வேகமாக எழுந்து நின்றேன்.

"நம்ம தியேட்டர் ஃபங்ஷனுக்கு வரலங்கறாப்பா."

"ஏம்மா?"

"இல்ல மாமா... வீட்டுல நெறய வேலையிருக்கு"

"வேலை தினம்தான் இருக்கும். ஒரு பாஸ் கிடைக்காதான்னு ஊரே அலையுது. நம்ம தியேட்டர் விழாவுக்கு வரலன்னா எப்படி? கிளம்பு... கிளம்பு" என்று கட்டளையாகக் கூறிவிட்டு நகர்ந்தார் மாமனார்.

"சொல்றவங்க சொன்னாத்தான் சரிப்படும். ஆறு மணிக்கு தியேட்டர்ல இருக்கணும். சீக்கிரம் கிளம்பு" என்று கூறிவிட்டு என் கணவர் வெளியே செல்ல, "கடவுளே..." என்றபடி வேதனையுடன் கட்டிலில் அமர்ந்தேன்.

நடந்தவை அனைத்தையும் பேசாமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த என் மகனும், மகளும் அருகில் வந்தனர்.

"அந்தப் படம் உனக்குப் பிடிக்காதா?" என்றான் நான்கு வயது மகன்.

"ம்... பிடிக்கும்."

"ப்ரதீப்ப பிடிக்குமா?"

"ம்..."

"அப்புறம் ஏன் வரமாட்டேங்குற?"

சில வினாடிகள் அமைதிக்குப் பிறகு, "சில சமயம் அப்படித்தான். பிடிச்சவங்கள பாக்க பிடிக்காமப் போயிடும்" என்றேன் மகேஷை நினைத்துக் கொண்டு.

குழந்தைகள் புரியாமல் விழித்தன.

தியேட்டருக்குச் செல்லும் வழியெங்கும் ஒரே அமர்க்களம். ப்ரதீப்பின் ரசிகர் மன்றத்தினர் தூள் கிளப்பியிருந்தார்கள். திரும்பிய திசையெங்கும் ப்ரதீப்பின் போஸ்டர்கள்... பேனர்கள்...

ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

தோரணங்கள்...

தியேட்டர் வாசலில் பயங்கர கும்பல். பெரும்பாலும் இளைஞர் கூட்டம். பெரிய டிஜிட்டல் பேனரில் 'ஈரக்காற்று' நூறாவது நாள் விழா என்று எழுத்துக்கள் பளிச்சிட, பேனரின் மேல்புறத்தில் ப்ரதீப்பும் மகேஷும் சிரித்தபடி காட்சியளிக்கும் புகைப்படங்கள்.

தியேட்டர் வாசலில் எங்கள் கார் நின்றதும், ஓடி வந்து கார் கதவைத் திறந்துவிட்டார் மேனேஜர்.

"எப்ப வர்றாங்களாம்?" என்றார் என் கணவர்.

"பக்கத்து ஊர் ஃபங்ஷன்ல இருக்காங்களாம். முடிச்சுட்டு ஒரு மணி நேரத்துல வந்துடுவாங்க. வந்தவுடனே படத்த நிறுத்திட்டு, ஃபங்ஷன் ஸ்டார்ட் பண்ணிடலாம்."

"போலீஸெல்லாம் வந்தாச்சா?"

"வந்தாச்சு சார்."

"எத்தனை பேரு?"

"நாப்பது பேரு சார்."

"போதுமா?"

"சமாளிச்சுடலாம் சார்."

"சரி... நீங்க படத்த போடச் சொல்லுங்க. அப்பத்தான் சத்தம் அடங்கும்."

மேனேஜர் எங்கள் அனைவரையும் அழைத்துச் சென்று முதல் வரிசையில் அமர வைத்தார்.

'ஆண்டவா... மகேஷ் என்ன பாத்துடக்கூடாது' என்று வேண்டியபடி அமர்ந்தேன்.

படம் ஆரம்பித்தது. குடித்துவிட்டு ப்ளாட்ஃபாரமில் விழுந்து கிடக்கும் ஹீரோவின் முகத்தை க்ளோஸ்-அப்பில் காண்பித்து, ஃப்ளாஷ்-பேக்கில் கதை விரிந்தது.

ஃப்ளாஷ்பேக் முழுவதும் அப்படியே எங்கள் காதல்தான். சிவப்புப் பூக்கள் சிதறிக்கிடக்கும் ஒரு குல்மொஹர் மரத்தடியில் நாங்கள் முதன்முதலாகச் சந்தித்தது... ஒரு மழைக்கால மாலையில், முகமெங்கும் மழைத்துளிகள் சிதறி விழ, எங்கள் காதலை பரிமாறிக்கொண்ட நிமிடங்கள்.... பின்னர் எங்கள் வீட்டில், எங்கள் காதலை கடுமையாக எதிர்த்தவுடன், என்னை மறந்துவிடும்படி நான் மகேஷிடம் கூறிய பிள்ளையார் கோயில்... என்று எதையும் மாற்றாமல் எடுத்திருந்தான் மகேஷ்.

ஒவ்வொரு காட்சியையும் பார்க்கப் பார்க்க மனசு தளும்பியது. பொங்கி வந்த கண்ணீரை யாருமறியாமல் துடைத்துக் கொண்டேன்.

இடைவேளைக்குப் பிறகு, காதல் தோல்வியில் குடிகாரனாகிவிட்ட ஹீரோவை, வேறொரு பெண் காதலித்து, அவனை குடியிலிருந்து மீட்டு திருமணம் செய்துகொள்வதாகப் படம் முடியும்.

திடீரென்று தியேட்டரில் பரபரப்பு, சளசளவென்று பேச்சு சத்தம்.

அவர்கள் வந்துவிட்டார்கள் போல. சட்டென்று எனக்கு வியர்த்துக் கொட்ட... தவிப்புடன் மேடையைக் கவனித்தேன்.

மேடையில் வேகமாக நாற்காலிகள் போடப்பட்டன. மைக் பொருத்தப்பட்டது. பத்தே நிமிடத்தில் நட்சத்திரங்கள் அனைவரும் மேடையேற, தியேட்டரில் விசில் சத்தமும் கைத்தட்டலும் காதைப் பிளந்தது. ரசிகர்கள் வண்ணக் காகிதங்களைக் கிழித்து மேலே பறக்கவிட்டனர்.

கடைசியாக மனைவியுடன் மேடையில் ஏறிய மகேஷைப் பார்த்ததும், மனசு படபடவென்று அடித்துக்கொண்டது. ஜீன்சும், டீ - சர்ட்டும் அணிந்திருந்தான். லேசாக சதை போட்டிருந்தான். ரசிகர்களைப் பார்த்து கையசைத்தபடி நாற்காலியில் அமர்ந்தான். அவன் என்னைப் பார்த்துவிடக் கூடாதே என்ற தவிப்புடன், என் மடியில் உட்கார்ந்திருந்த என் மகனுக்குப் பின்னால்

**ச**ன் செய்திகளைத் தவிர, கலைஞர் கருணாநிதி அதிகம் விரும்பிப் பார்ப்பது ராதிகாவின் 'செல்வி' சீரியலைத்தானாம்.





முகத்தை மறைத்துக்கொண்டேன்.

என் மாமனார் அனைவருக்கும் மாலை அணிவித்து முடித்தவுடன், நட்சத்திரங்கள் பேச ஆரம்பித்தனர். அனைவரும் பேசி முடிக்க, பின்பு மகேஷ் பேசினான்.

"எனது சொந்த ஊரில் நடைபெறும் இந்த விழாவுக்கு வந்திருப்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். சந்தோஷப்பெருக்கில் எனக்கு வார்த்தைகளே வரவில்லை. இந்தப் படத்தைப் பற்றி பலரும், பலவிதமாகப் பேசினார்கள். நான் பகிர்ந்துகொள்ள விரும்புவது என்னவென்றால்... தமிழகம் முழுவதும் எனக்கு ஒரு மரியாதையைப் பெற்றுத் தந்த இந்தத் திரைப்படத்தின் முதல்பாதி, இந்த ஊரில்தான் நடந்தது..." என்று கூற, தியேட்டரில் பயங்கர அமைதி.

தொடர்ந்து மகேஷ், "காரில் இந்த ஊருக்குள் நுழைந்தவுடனேயே பழைய நினைவுகள் என்னை ஆட்கொள்ளத் தொடங்கிவிட்டன. நான் என் காதலியுடன் சுற்றித் திரிந்த வீதிகள், பேசிச் சிரித்த ஆற்றுப்பாலம்... அழுது பிரிந்த பிள்ளையார் கோயில்... எல்லாம் என் மனசை என்னவோ செய்தது. அதுதான் காதல். பிரிந்து போய், ஆயிரம் மைல்களுக்கு அப்பால் சென்றுவிட்ட பிறகும், திருமணமாகி குழந்தைகள் பெற்ற பிறகும், காதலியை நினைக்கும்பொழுதெல்லாம் மனசுக்குள் ஒரு ஈரக்காற்று வீசுவதை யார் தடுக்க முடியும்? அதுதான் ஒரு 'அழகி'யாக, 'ஆட்டோகிராஃப்'பாக "ஈரக் காற்றாக' உங்கள் முன்பு வீசுகிறது..." என்று பேச, நான் உதட்டைக் கடித்து, எச்சில் விழுங்கி அழுகையை அடக்கினேன்.

சிறிது இடைவெளி விட்ட மகேஷ், முதல் வரிசையைப் பார்த்தபடி, "வெற்றி பெற்றவர்களின் மிகப்பெரிய துக்கம் என்ன தெரியுமா? வெற்றி பெற்ற சமயத்தில் நம்மை மிகவும் நேசித்தவர்கள் அருகில் இல்லாத துக்கம்தான். எனக்கும் அந்தத் துக்கம்..." என்ற மகேஷ், என்னைக் கவனித்துவிட்டான். சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டுத் தடுமாறினான்.

எனக்குப் பகீரென்றது. இனி என்ன பேசுவான்? என் காதலியும் இந்தக் கூட்டத்தில்தான் இருக்கிறாள் என்று சொல்லிவிடுவானோ?

நான்கே வினாடியில் சமாளித்துக் கொண்ட மகேஷ், "எனக்கு இந்தத் துக்கம் இப்போது இல்லை. நான் மிகவும் நேசித்த, என்னை மிகவும் நேசித்த இந்த ஊர்க்காரர்கள் இந்த சபை முழுவதும் நிறைந்துள்ளனர். அது போதும் எனக்கு. நன்றி, வணக்கம்" என்று தனது பேச்சை முடித்தவுடன், எழும்பிய கைத்தட்டல் அடங்க வெகுநேரமானது.

விழா முடிந்து அனைவரும் கீழே இறங்க... என் மாமனார் அவர்களை அழைத்துக்கொண்டு எங்களை நோக்கி வர, நான் மீண்டும் தவிக்க ஆரம்பித்தேன்.

எங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் நட்சத்திரங்களை அறிமுகப்படுத்திவிட்டு, கடைசியாக என்னிடம் வந்தார்.

"இது ராதா, என் மருமக. இவரு தாம்மா டைரக்டரு. நம்ம ஊர்க்காரர் தான்" என்று என் மாமனார் அறிமுகப் படுத்த, எனக்கு ஒரே சமயத்தில் மிகுந்த வேதனையாகவும், மிகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

"வணக்கம்" என்று நான் கைகூப்ப, மகேஷ் ஒரே ஒரு வினாடி, என் கண்களை உற்றுநோக்கிவிட்டு, பதிலுக்கு 'வணக்கம்' சொல்லிவிட்டு நகர்ந்தான்.

ஆயிரமாயிரம் வார்த்தைகள் பேசிக் கொண்ட நாங்கள், ஆயிரமாயிரம் விஷயங்கள் பேசத் துடித்த நாங்கள், கடைசியில் சந்தித்தபொழுது, "வணக்கம்" என்று மட்டும்தான் கூறிக்கொள்ள முடிந்தது. ○

## பேட்டி



'பரமசிவன்' அல்லது 'காட்ஃபாதர்' ரிலீசாகும் வரை எந்தப் பத்திரிகைக்கும் பேட்டி தருவதில்லை என்கிற முடிவிலிருக்கிறார் அஜீத்.




# 'ஜில்'லுனு ஒரு சைட்டு!

வலைபாயுதே

**ஸ்டார்:** யாரை வேணும்னா கேளுங்க. 'இப்போதைக்கு உங்க இதயம் திருடிய கன்னி யார்?'னு! அவங்க கட்டும் விழிச் சுடரை உருட்டி, 'சற்றுத் தொலைவிலே அவள் முகம் பார்த்தேன்! அங்கே தொலைந் தவன் நானே!'ன்னு பாட ஆரம்பிச்சுடு வாங்க! இப்போதைக்கு கோலிவுட்டே ஜில்லுன்னு காதல் பண்ணிக்கிட்டிருக்கிற அசின், தனக்கே தனக்குன்னு மெனக்கெட்டு ஒரு வெப்சைட் ஆரம்பிச்சிருக்காங்க! www.asinonline.com. அசின் பத்தி அத்தனை யும் இங்க கிடைக்கும்னு நான் சொல்லா மலேயே உங்களுக்குத் தெரியும். நான் பார்த் ததுல ஸ்பெஷலா தெரிஞ்சது, அசினோட மாடலிங் புகைப் படங்கள்! பக்கம் பக்கமா பசங்க ஜொள் விட்டு கடுதாசி போட்டிருக் காங்க! அசின் எப்போ பதிலு போடும்?

**டௌன்லோட்:** இப்போ பிரிட்டன்ல மழை பெய்யுமா? சிகாகோல புயல் அடிக்குமா? பாகிஸ்தான்ல மொட்டை வெயில் அடிக்குமா? - இப்படி உலக அள வுல வானிலை நிலவரத்தைத் தெரிஞ் சுக்கணுமா! http://www.snapfiles.com/get/weathergrabber.html விலாசத்துக்குப் போயி, கதவைத் தட்டுனீங்கன்னா, வெதர் க்ராபர் அப்ளிகேஷனைக் கூட்டிக்கிட்டு வரலாம். தற்போதைய தட்பவெப்பநிலை, அடுத்த ஹவர் எப்படி இருக்கும், அடுத்த 10 நாளைக்கு எப்படி இருக்கும். இப்படிப் பல விஷயங்களை சாட்டிலைட் படங்களோட சொல்லுறாங்களாம்!

**வலைப்பதிவு:** இந்தமாத காலச் சுவடின் சினிமா பகுதியில், திரு. அ. ராம சாமி எழுதியிருக்கும் இக்கட்டுரை, எஸ்.ஜே. சூர்யாவையும் அவரது சினிமா மற்றும் தமிழக ரசிகர்களின் நாடிபிடிப்புப் புலமை யையும் வெளிச்சமிட்டுக் காட்ட முயல் கிறது. அதிலிருந்து... 'உடல் பற்றிய ரகசியங் களை முன்வைக்கும்பொழுது பார்வை யாளர்களின் மனமோ, உடலோ வேறு எதையும் எதிர்பார்க்காது என்றும்கூட அவர் நம்புகிறார். படத்தின் நாயகி புதுமுக மானாலும் பரவாயில்லை. இளமையும் வாளிப்பும் கொண்ட உடலும் அதை வெளிப்படுத்தத் தயங்காத மனமும் கொண் டவராக இருந்தால் மட்டுமே போதும் என் பதும் அவரது நம்பிக்கையாக இருக்கிறது. உடல் - அதிலும் பெண்ணுடல் பற்றிய பரவசம். அதுதான் அவரது ஒரே ஆதாயம். (yemkaykumar.blogspot.com - வலைப்பதி விலிருந்து)

\- வலைஞன்

# தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** தனம், குடும்பம், வாக்கு மேலோங்கும். கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபச் செலவு ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புண்ணிய ஸ்தல தரிசனம் செல்ல நேரிடும். தாய், தந்தையின் மூலம் ஆதாயம் கிடைக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு சன்மானம் கிடைக்கும். வியாபாரிகளுக்குத் தொழில் சுறுசுறுப்புடன் செயல்படும். வீடு, வாசல் வாங்க உற்ற தருணம் இது. ஆஞ்சநேயர் வழிபாடு உத்தமம்.

**ரிஷபம்:** கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். மனதில் தைரியம், தன்னம்பிக்கை ஏற்படும். நீண்ட நாள் முடிவு பெறாத சொத்து, வழக்கு பிரச்னைகள் முடிவுக்கு வந்து சேரும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் கிடைக்கும். தடை விலகி திருமணம் கைகூடும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல மாறுதல் கிட்டும். வியாபாரிகள் முன்னேற்றம் அடைவார்கள். குரு / கேது வழிபடுதல் நலம்.



**மிதுனம்:** மாணவ, மாணவிகளுக்கு அதிக பாராட்டு கிடைக்கும். திருமணக் காரியம் தங்கு தடையின்றி கைகூடும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். மன சலனம் தீரும். உத்தியோகஸ்தர்களுக்கு உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வியாபாரிகள் சக்கைப்போடு போடுவார்கள். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிடைக்கும். புதிய வீடு வாங்கலாம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு/கேது வழிபட்டு வருதல் நலம்.

**கடகம்:** மனதில் தன்னம்பிக்கை ஏற்படும் வாரம். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். வியாபாரிகளுக்குத் தொழிலில் இருந்து வந்த மந்தமான சூழ்நிலை மாறி நற்பலன் கிடைக்கும். மாணவ, மாணவிகள் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். வேலையில் இடமாற்றம் ஏற்படும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. தடை விலகி திருமணம் கைகூடும். சனி / குரு/ வழிபடுதல் நலம்.

**26.10.2005 முதல் 1.11.2005 வரை**

• படம்: ஸ்ரீஹரி

**சிம்மம்:** திடீர் தனயோகம் கிட்டும். தடங்கல் விலகி நல்லது நடக்கும். மாணவ,

# நடக்குமென்பார்; நடக்கும்!

**எனது மகனுக்குத் திருமணம் தட்டிக்கொண்டே செல்கிறது. எப்போது நடக்கும்? ராகுவால் பாதிப்பு உண்டா?**

**- டி.பி. கோபால்சுவாமி, பெங்களூர்.**

உங்கள் பையனுக்கு சனி தசை, சனி புத்தி நடக்கிறது. 2006-ல் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்கு மேற்கு திசையில் பெண் அமையும். உறவில் கிடையாது. சர்ப்பதோஷம் உள்ள பெண்ணாகச் சேர்க்கவும். ராகுவால் பாதிப்பு கிடையாது.

**எனது உயர்கல்வி ஆசை நிறைவேறுமா? எனது எதிர்காலம் எவ்விதம் அமையும்?**

**- எம்.ஆர். கோபி, ஈரோடு**

தங்களுடைய 20 வயது, 2 மாதம், 25 நாள் வரை கேது தசை நடைபெறும். அதுவரை எதுவும் போராட்டமாகத்தான் இருக்கும். கேது ப்ரீதி செய்து வரவும். அதன் பின் சுக்ரதசை நன்றாக இருக்கும். அதிக கவனமுடன் படித்து வெற்றிக் கனியைப் பறிக்கலாம்.

மாணவிகள் படிப்பில் கவனம் தேவை. குடும்பப் பெண்கள் வாக்குவாதம் செய்ய வேண்டாம். கணவர்மார்களுக்கு வேலைப் பளு அதிகரிக்கும். வெளியில் செல்லும்போது கைப்பொருள் மீது கவனம் தேவை. கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. சிலருக்கு வீடு/ வேலை மாற்றம் ஏற்படும். சனி/குரு/ராகு/கேது வழிபடுதல் நலம்.

**கன்னி:** சிறப்பான வாரம். பொருளாதாரம் சீர்படும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கைகூடும். தீராத நோய் நொடி, வழக்கு தொல்லை விலகிப் போகும். புதிய தொழில் முயற்சியில் இறங்கலாம். உத்தியோகஸ்தர்கள் தொட்டது துலங்கும். பங்கு மார்க்கெட்டில் உள்ளவர்கள் ஏற்றம் பெறுவார்கள். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். வீடு/வாகனம் வாங்கலாம். ராகு/கேது வழிபட்டு வருதல் நலம்.

**துலாம்:** உடல் ஆரோக்கியம் மேம்படும், கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். குடும்ப வாழ்வில் நிம்மதி ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல வேலை மாற்றம் வரும். சிலருக்கு அயல்நாடு செல்லும் வாய்ப்பு வரும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். வழக்கு விசாரணை முடிவுக்கு வரும். வியாபாரிகளுக்கு நற்பலனைத் தரும். குரு/சனி/ராகு/கேது வழிபட்டு வருதல் நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்:** வழக்கு வெற்றி அளிக்கும். நோய் நொடி தீரும். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர். வெளிநாடு செல்லும் வாய்ப்பு வரும். தொழில் துறையில் நல்ல முற்போக்கான சூழ்நிலை ஏற்படும். மாணவ, மாணவிகள் படிப்பில் நல்ல மேன்மை கிட்டும். குடும்பத்தில் சந்தோஷமான காரியங்கள் நடக்கும். குழந்தைகளைப் பற்றிய மனக்கவலை தீரும். உடல் நலம் நன்கு இருக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். தெய்வ தரிசனம் கிட்டும். வீடு/வாகனம் வாங்கலாம். ராகு/கேது/குரு வழிபடுதல் நலம்.

**தனுசு:** தொட்டதெல்லாம் வெற்றி அளிக்கும். திருமண காரியம் கைகூடும். உடல்நலம் நன்றாக இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு ஏற்றம்

# பரத்வாஜ் பதில்கள்

**என்** மகளுக்குத் திருமணம் தள்ளிப் போகிறது. அவளுக்கு எப்போது திருமணமாகும்? ஏதாவது பரிகாரம் தேவையா?

- உமாராவ், பெங்களூர்.

உங்கள் பெண்ணுக்கு 2006-ல் திருமணமாகும். வெளிநாட்டில் வேலை செய்யும் வரன் அமையும். உறவில் இடையாது. நாகதோஷம் உள்ள பையனாகப் பார்க்கவும்.

**என்** நாத்தனாருக்குத் திருமணம் எப்போது நடக்கும்? பரிகாரம் ஏதேனும் தேவையா?

- ஆரத்தி கணேஷ், பெங்களூர்.

தங்கள் நாத்தனாருக்கு 33 வயது முடிவுக்குள் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்கு மேற்கு/தெற்கு திசையிலிருந்து வரன் அமையும். 2006-ல் திருமணம் தகையும். பரிகாரம் வேண்டாம்.

நேரும். புதிய வேலை கிடைக்கும். ஊதிய உயர்வு ஏற்படும். மாணவ - மாணவியர் படிப்பில் முன்னேற்றம் பெறுவார்கள். கணவன், மனைவி அனுசரணையாக இருப்பார்கள். வியாபாரிகள் தொழிலில் நல்ல நற்பலன் அடைவார்கள். வீடு/வாகனம் வாங்க நல்ல நேரம். குழந்தைகளால் சந்தோஷம் மேலோங்கும். சனி வழிபாடு செய்து வருதல், ராகு/கேது வழிபட்டு வருதல் நலம்.

**மகரம்:** குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பொருளாதார பாதிப்புகள் விலகிப் போகும். தடை விலகி திருமணம் இனிது நடக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு நற்பலனை அளிக்கும். தாய் வழியில் ஆதாயம் கிடைக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலை மாறுதல், இடமாற்றம் வரலாம். வியாபாரிகளுக்கு நல்ல ஏற்றமான சூழ்நிலை ஏற்படும். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். சனி/குரு வழிபட்டு வருதல் பலன் அளிக்கும்.

**கும்பம்:** வேலைப்பளு அதிகரிக்கும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். பேச்சைக் குறைக்கவும், கணவன் மனைவிக்குள் அனுசரணை தேவை. வீட்டைப் பார்க்க நேரம் இருக்காது. நெருங்கிய உறவினர்/நண்பர் விலகிப் போவார்கள். சிலருக்கு வீடு/வாகனம் மாற்றி அமைக்கும்படி சூழ்நிலை உருவாகும். திருமணம் ஆகாது தடைபட்டு வந்தோருக்குத் திருமணம் நடக்கும். மாணவ- மாணவியர் படிப்பில் அதிக கவனம் செலுத்துவது நல்லது. உணவுக் கட்டுப்பாடு அவசியம். வியாபாரிகளுக்கு ஏற்றம் அளிக்கும். சிலருக்கு அயல்தேச மனிதர்களால் ஆதாயம் கிடைக்கும். ராகு/கேது வழிபாடு சிறந்தது.

**மீனம்:** வேலையில் இருந்து வந்த சிரமம் குறையும். திடீர் பண ஏற்றம் ஏற்படும். அயல்நாடு செல்லும் வாய்ப்புக் கிட்டும். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சிகள் நடக்கும். வீடு வாங்க ஏற்ற தருணம் இது. புதிய தொழில் துவங்க நல்ல நேரம். ஆரோக்கியம் பாதிக்காது. கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். வியாபாரிகள், கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். நண்பர், உறவினர் மூலம் நற்பலன் கிடைக்கும். தனம், குடும்பம் மேலோங்கும். பொருளாதாரம் தடைபடாது. குரு/சனி/ராகு/கேது வழிபட்டு வருதல் நன்மை அளிக்கும்.



# நான் ஃபீனிக்ஸ்



'சூர்யா என்று பெயர் வைத்திருக்கிறீர்கள்! உங்களுக்கு ஃபீனிக்ஸ் பறவை பிடிக்குமில்லையா?' என்று கேட்டார் ஒரு உதவி இயக்குனர். நான் மறுத்தேன். ஃபீனிக்ஸ் பற்றிச் சொல்லப்படும் கதை தன்னம்பிக்கை தருவதாக இருக்கலாம். ஆனால் அது கற்பனை. ஃபாலரோப் அப்படியல்ல... பூமி உருண்டையின் ஒரு பக்கத்திலிருக்கும் அமெரிக்காவிலிருந்து, மற்றொரு பக்கத்தில் இருக்கும் இந்திய துணைக் கண்டத்துக்கு பல்லாயிரம் கிலோ மீட்டர்கள் சிறகடித்து வரும் இந்த சின்னஞ்சிறு தண்ணீர்ப் பறவைகள். வாழ்க்கையை ஒவ்வொரு கணமும் வாழ்ந்து பார்க்க வேண்டும் என்கிற துடிப்போடு, வழிநெடுகிலும் எந்தச் சவாலையும் எதிர்கொள்ளும் துணிவோடு கண்டம் விட்டு கண்டம் கடந்து வரும் இந்தப் பறவைகளின் ஆற்றலை என்னவென்று சொல்வது! பயணம் என்கிற சொல்லுக்கு எத்தனை உண்மையான அர்த்தத்தை இவை தருகின்றன!

வாழ்வதற்காக நீண்ட பயணத்தை மேற்கொள்ளும் இந்தப் பறவைகள், வாழ்க்கை எனும் நீண்ட பயணத்தை பதற்றத்தோடு மேற்கொள்ளும் மனிதர்களுக்கு ஒரு பாடம். அந்தப் பறவைகளிடமிருந்து பாடம் கற்றுக்கொண்ட முதல் மனிதனாக நானே இருக்க விரும்புகிறேன்.

'பூவெல்லாம் கேட்டுப்பார்' என்ற சரியான பேருந்தில் ஏறிப் பயணம் புறப்பட்ட நாங்கள், தோல்வி எனும் தவறான ஊரில் இறக்கிவிடப்பட்டபோது, திகைத்துப் போனோம். வஸந்த் சார், நான், ஜோதிகா என்று ஒட்டுமொத்த யூனிட்டும் உண்மையாக உழைத்த படம். இப்போது போட்டுப் பார்த்தால் கூட அது எத்தனை 'குவாலிட்டியான பிக்சர்' என்பது தெரியும். இருந்தும் அந்தப் படம் ஏன் ஏமாற்றியது? "நாம என்




# அல்ல... ஃபாலரோப்!

ண்டா தப்பு பண்ணினோம்'' என்று வஸந்த் சார் விரக்தியாகச் சிரித்தபோது, ஒரு கணம் நான் கண் கலங்கிவிட்டேன்.

தரமான படம் என்பதைவிட வித்தியாசமான கதையில் நடித்தாலாவது வெற்றியை எட்டிப்பிடிக்க முடியுமா என்கிற எதிர்பார்ப்போடு 'உயிரிலே கலந்தது' படத்தை ஒப்புக் கொண்டேன். மீண்டும் ஜோதிகாவுடன் இணைந்து நடித்த படம். ரகுவரன் சார் எனக்கு அண்ணனாக நடித்திருந்தார். தம்பியாக நான். அந்தப் படத்தின் கதை பேசப்பட்டதே தவிர, வந்த வேகத்திலேயே பெட்டிக்குள் சுருண்டு போனது படம். கூடவே நானும். வீட்டை விட்டு வெளியே வர வேண்டுமா என்று யோசிக்க வைத்த நேரம். ஜாதகத்தை, ஜோசியத்தை நம்பலாமா என்று துவள வைத்த தொடர் தோல்விகள். சினிமாத் துறையை அவசரப்பட்டு தேர்ந்தெடுத்து விட்டோமோ என்ற குழப்பம் என்னைக் கொஞ்சம் கொஞ்சமாக தின்ன ஆரம்பித்தபோது, திருப்புமுனையாக அமைந்தது அந்த ரயில் பயணம்.

**கா**ர்கில் நிதிக்காக தமிழ்த் திரையுலகம் சார்பில் மதுரையில் கலை நிகழ்ச்சி. அதில் கலந்து கொண்டுவிட்டு ரயிலில் சென்னைக்குத் திரும்பிக் கொண்டிருந்தோம். எங்கள் பெட்டியில் ரகுவரன் சாரும் பயணம் செய்து கொண்டிருந்தார். இரவு பதினோரு மணி. கண்கள் சொருக ஆரம்பித்தன. அந்த நேரத்தில் "டேய் சூர்யா!" என்றொரு பாசமான குரல்.

பதற்றத்தோடு திரும்பினால் அங்கே ரகுவரன் சார். என்னையும் அப்பாவையும் கூப்பிட்டார். "எப்படிடா உங்களுக்குத் தூக்கம் வருது?'' என்று கேட்டார். புரியாமல் விழித்தோம்.

"நீங்க நினைச்ச மாதிரி முழு நடிகனா ஆயிட்டீங்களா? இது உங்க அப்பா-அம்மா கொடுத்த முகம். இதை வெச்சுக்கிட்டு எவ்வளவு நாள் ஓட்டுவீங்க? உங்களோட முகம் எங்கே? அதை முதல்ல உருவாக்குங்க. முகத்தை மாத்து, முடியை மாத்து. நாம ஏன் வரமுடியலேன்னு ஒரு மணி நேரத்துல எத்தனை முறை யோசிப்பீங்க? உங்களோட மைனஸ் என்னன்னு உங்களுக்குத்தான் தெரியும். அதைக் கண்டுபிடிச்சு நீங்கதான் மாத்தணும்.'' என்று ஒரு கவலை மிகுந்த அண்ணனைப் போல அவர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் நெஞ்சுக்குள் ஆழமாய் ஆணியடித்த மாதிரி இறங்கியது.

தூக்கம் தொலைத்த அந்த ரயில் பயணத்துக்குப் பிறகு, தேடி வந்த வாய்ப்புகளை கவனமாக ஆராயத் தொடங்கினேன். எச்சரிக்கை உணர்வோடு இருந்ததில் ஒன்றரை வருட இடைவெளி விழுந்துவிட்டது. ஒரு நல்ல கதையில்,



● ஃபாலரோப்

அற்புதமான டைரக்டரின் இயக்கத்தில் தான் அடுத்த படம் பண்ண வேண்டும் என்று பல்லைக் கடித்துக்கொண்டு பிடிவாதமாக இருந்த நேரத்தில்தான், 'ஃப்ரெண்ட்ஸ்' பட வாய்ப்பு தேடி வந்தது. இங்கே ஷங்கரைப் போல கேரளத்தில் டைரக்டர் சித்திக். சூப்பர்ஹிட் டைரக்டர். ஆனால் படம் டபுள் ஹீரோ சப்ஜெக்ட். 'மீண்டும் டபுள் ஹீரோ பண்ண வேண்டாம்' என்று எல்லோரும் தடுத்தார்கள். 'இரண்டாவது ஹீரோ என்றாலே கொஞ்சம் கம்மியாகத்தான் எடைபோடுவார்கள். போஸ்டர்களிலும், விளம்பரங்களிலும் முக்கியத்துவம் தரமாட்டார்கள்' என்றார்கள். ஆனாலும் சித்திக் சாரின் அழைப்பை உதாசீனப் படுத்த விரும்பவில்லை. ஃப்ரெண்ட்ஸ் படத்தின் மலையாளப் பதிப்பை ஒரு முறை பார்த்துவிட்டு முடிவெடுக்கிறேன் என்றேன்.

அற்புதமான கதை. இரண்டாவது ஹீரோ என்றாலும் நான் சொல்வதைத் தான் ஹீரோ கேட்கிறார். மற்ற கேரக்டர்களும் கேட்கின்றன. இத்தனை முக்கியத்துவம் கொண்ட கேரக்டரை எப்படி இழப்பது! எனக்கு பப்ளிசிட்டி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. முதலில் சூர்யா திறமையான நடிகர் என்று எல்லோருக்கும் தெரிந்தாக வேண்டும். அப்பாவிடம் சண்டை போட்டு அனுமதி வாங்கி அந்தப் படத்தில் நடிக்க ஆரம்பித்தேன்.

படப்பிடிப்பு தொடங்குவதற்கு முன்பு என் வாழ்க்கையில் ஒரு மாற்றம். எனது ஸ்டண்ட் குரு பாண்டியன் மாஸ்டர், தியானத்தை எனக்கு அறிமுகப் படுத்தி வைத்தார். மெடிட்டேஷன் என்றால் வயதில் மூத்தவர்கள், அமைதியை நாடுகிற சன்னியாசிகள் மேற்கொள்ளும் உயர்ந்த விஷயம் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதைப் பயன்படுத்தி யாரும் மனதை சுலபமாக கட்டுப்பாட்டில் வைக்கலாம் என்பதை உணர்ந்து கொண்டேன். தியானத்தில் இறங்கிய பிறகு, காலை நாலரை மணிக்கெல்லாம் படுக்கையைவிட்டுத் துள்ளி எழத் தொடங்கினேன். துறுதுறுவென்று தூள் பறந்த உற்சாகமும், புத்துணர்ச்சியும் என்னை தூசு தட்டி செயல்பட வைத்தது. படப்பிடிப்பில் பயமெல்லாம் பறந்தோடி, நினைத்த விஷயத்தைச் செய்து, டயலாக்கை திணறாமல் பேசி நடிக்க ஆரம்பித்தேன். கிஷோர் மாஸ்டர் சொல்லித் தந்த ஒவ்வொரு நடன அசைவும் மனதில் பசை போல் ஒட்டிக் கொள்ள டான்ஸில் மறுபடியும் ஒரு ஜம்ப்! ஷூட்டிங் ஸ்பாட்டில், "முன்னாடி பார்த்த சூர்யாவா இது. ரொம்ப கான்ஃபிடன்டா இருக்காரே!" என்று லைட்மேன்கள் எல்லாம் என் காது பட பேசிக்கொண்டு போனதைக் கேட்டு உள்ளுக்குள் கொஞ்சம் உரமூட்டிக் கொண்டேன். ஆனால் அதில் குளிர் காயவில்லை.

'நாம் செய்வது போதாது. இதோ விஜய் கண் முன்னால் ஒரு சக்சஸ்ஃபுல் ஆர்ட்டிஸ்டாக இருக்கிறார். அவருடன் சவாலாகப் பண்ண வேண்டிய காட்சிகள் நிறைய இருக்கின்றன' என்று என் நிலைமையை உணர்ந்தேன். எல்லா சக்தியையும் ஒன்று திரட்டி நடித்த அந்தப் படத்தில் என்ன பலன் கிடைக்கும் என்று எதிர்பார்த்து வந்தேனோ, அது கிடைத்தது.

'சூர்யாவுக்குள்ளிருந்த திறமையான

* பாண்டியன்



* கிஷோர்



* ரகுவரன்



நடிகர் முதல்முறையாக முகம் காட்டியிருக்கிறார்' எனப் பத்திரிகைகளும் ரசிகர்களும் பாராட்டினார்கள். முதன் முதலில் ஒரு சின்ன தைரியம். ஒரு படிக் கட்டுக்குப் பக்கத்தில் போய் விட்டோம் என்ற நம்பிக்கை. ஒரு கண்டத்திலிருந்து மெல்ல மெல்லப்



• ... படத்தில்



• 'ஃப்ரண்ட்ஸ்'...

பறந்து இலக்கில் தரையிறங்கிய ஃபால ரோப் பறவையைப் போல் ஒரு துடிப்பு. அதே நேரம் 'இது நம்முடைய படமல்ல. இதில் விஜயும் ஒரு ஹீரோ. எனவே இதை என்னுடைய வெற்றியாகக் கொண்டாட முடியாது' என்ற தெளிவும் வந்தது. இந்த நேரத்தில் தான் 'சேது' படம் பற்றித் திரையுலகம் முழுவதும் தீப்பிடிக்கிற மாதிரி டாக்.

'சேது' படத்தை ரிலீஸ் பண்ண முடியாமல் நூற்றுக்கணக்கான ப்ரீவியூ ஷோக்களை போட்டுக் காட்டிக் கொண் டிருந்த நேரம். அந்தப் படத்தோடு எனக்கு இரண்டு தொடர்புகள் இருந்தன. 'சேது' படத்தின் ஒளிப்பதிவாளர் ரத்னவேலு எனது நண்பர். 'சேது'வில் விக்ரமின் அண்ணனாக அப்பா நடித்திருந்தார்.

'சேது' பட டப்பிங் நடந்து கொண் டிருந்தபோதே தினசரி அப்பா பிரமிப் பாகச் சொல்லிக் கொண்டிருந்தார். ப்ரீவியூ காட்சிகளுக்குப் போய் விட்டு வந்த தம்பி, தங்கை, உறவினர்கள், நண்பர்கள் என்று எல்லோரும் படத்தைப் பற்றி என்னிடம் வியந்து சொல்ல ஆரம்பித்தார்கள். நானோ, 'முதல் முறையாக ஏதே னும் புதுசா ட்ரை பண்ணி யிருப்பாங்க' என்று அலட்சிய மாகச் சொல்லிவிட்டு, பத்து நாட்கள் கடந்த பிறகே ப்ரீவியூ காட்சிக்குப் போனேன். படம் ஓட ஆரம்பித்தது.

தாஜ்மஹாலைப் பற்றி நாம் கேள்விப்பட்டது, படித்தது, டி.வி. யில் பார்த்தது என எல்லாமும், அதை நேரில் பார்க்கிறபோது எப்படித் தகர்ந்துவிடுமோ, அப்படித்தான் 'சேது' வும் இருந்தது. இதயத்தின் எடை கிலோகணக்கில் ஏறிவிட்டிருந்தது. ப்ரீவியூ தியேட்டரில் எனக்குப் பக்கத்தில் விக்ரம் உட்கார்ந்திருந்தார். "நீங்கதானே அது.. பைத்தியமாக... மொட்டை அடிச் சுக்கிட்டு.. உடம்பு மெலிந்து கேரக் டருக்காக ஒரு நடிகர் இவ்வளவு பண்ண முடியுமா?" திகைப்போடு கேட்டேன்.

"இதற்கு நான் காரணமல்ல.. டைரக் டர் பாலா" என்றார் விக்ரம். இத்தனை பெரிய படைப்பைக் கொடுத்த அந்த முகத் தைத் தேடினேன். பாலசந்தர், பாரதிராஜா மாதிரி இருப்பாரோ என்று படம் முடிந்து வெளியேறிய கூட்டத்துக்கு நடுவே அலைபாய்ந்தபடி கண்களைச் சுழல விட்டேன். தியேட்டரின் லிஃப்ட்டுக்கு அருகில் அந்த உருவம்... ஒரு கணம் அதிர்ந்தே போனேன்.

(டைரியைத் தொடர்வேன்)



# முல்லை

வெயிலின் உக்கிரம் இரண்டு நாட்களாகக் கொஞ்சம் அதிகம்தான். சூட்டுக் காய்களை உடம்பு முழுவதும் தேய்த்துவிட்டாற்போல் அதன் வெக்கையில் சுந்தரேசனுக்கு ஒய்ச்சலாய் இருந்தது. பையை வைத்துவிட்டு திண்ணைத் தூணொன்றில் சாய்ந்து கொண்டார்.

பழங்காலத்து வீடு. முன்புறம் புழக்கத்தினால் நன்றாய் இருந்ததே ஒழிய, பின்கட்டு பூராவும் போன ஐப்பசி மழையில் இடிந்து கிடக்கிறது.

போஸ்ட் மாஸ்டர் உத்தியோகம் சுந்தரேசனுக்கு. சம்பளமாக வரும் சில நூறுகள் கைக்கும் வாய்க்குமே சரியாகிப் போகும் வாழ்க்கை. இதோ இந்தக் கல் வீடும் பத்து மா நிலமும்தான் அவரது சொத்து. ஆனால் விளைநிலம் முழுவதும் குத்தகைக்காரனிடம் மாட்டிக் கொண்டிருக்கிறது. வருவது சாத்தியமில்லை. மூத்தவள் இந்து பிறந்தவுடன் அதில் அதிக வருட வித்தியாசமில்லாமல் பிறந்தாள்.

# வாசம்!

விஜயலக்ஷ்மி ஸ்ரீதர்



ஆறு வருடங்களுக்குப் பிறகு சுரேஷ்.

வளர்ந்த பிள்ளைகள், ஏறி வரும் வயோதிகம் எல்லாவற்றையும் உத்தேசித்துதான் பின் கொல்லையை முப்பதாயிரத்துக்கு விற்றுவிட்டிருந்தார்.

''ராஜி!'' சுந்தரேசனின் குரலுக்கு உடனே ஓடோடி வந்தாள் மனைவி ராஜலஷ்மி.

மஞ்சள் பையிலிருந்து பணக்கட்டை நீட்டினார்.

"பீரோல வை. பத்திரம்..."

அந்தச் சொற்களின் உள்ளர்த்தமும், அதனோடு அவர் கூற விரும்பியவையும் ராஜிக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் துடிக்கிற மனதின் ஆற்றாமைக்குத்தான் பதில் சொல்ல முடியவில்லை. 'எப்படி இப்படி கல்லாகிப் போனார் இந்த மனுஷர்?' என்று மனசுக்குள் குமைந்தாள்.

சில சமயங்களில் மனிதனின் ஆழமான சுபாவம் வெளியில் தெரிவதில்லை. மேம்போக்காய் நித்ய கர்மாக்களை பண்ணிக்கொண்டு அல்ப சுகத்திலேயே மகிழ்ச்சியடைகிற ஆத்மாவாய் வெளியில் தெரிந்தாலும் உள்ளூர கணக்கில்லாத ஆங்காரம் சுந்தரேசனிடம் குடி கொண்டிருந்தது. அது வெளிப்பட்டது, அவரின் மூத்த பெண் இந்துமதியின் விஷயத்தில்தான். வீட்டுக்குத் தெரியாமல் திடீரென சம்பத்தை கல்யாணம் பண்ணிக் கொண்டு வந்த அன்றைக்கு, சுந்தரேசன் அதிர்ந்துகூடப் பேசவில்லை. ஆனால் முகத்தில் உள்ள அத்தனை நரம்புகளும் தெறித்துவிடுவது மாதிரியான அழுத்தத்தில் உறைந்திருந்தார். ஈஸிசேரின் சாய்மானத்திலேயே அன்றைய பொழுது முழுவதையும் அசையாமல் கழித்தார். எல்லாக் காழ்ப்பும் ஒரு சேர கல்போல உருண்டு அவர் மனதில் அப்படியே தங்கிவிட்டது. சற்றே அதன் இறுக்கம் தளர்ந்தாலும் மனம் திறந்த உரையாடல்கள் குறைந்தே விட்டன.

ஒரு வருடம் கழித்து ராஜி மெதுவாய் அவரிடம்

சொன்னாள்.

"கொழந்த பண்ணினது பண்ணிட்டா. என்னால அவளப் பாக்காம இருக்க முடியல. இந்து ரொம்பக் கஷ்டப்படறா. மொகம் கொடுத்துப் பேசினா சித்த சந்தோஷப்படுவா."

துளிர் வெற்றிலைகளை காம்பையும் நுனியையும் கிள்ளி சுண்ணாம்பு தடவி பாக்கை வைத்து மடித்து உள்ளே தள்ளினாரே தவிர, ராஜியின் வார்த்தைகளுக்குத் துளியும் செவி சாய்க்கவில்லை சுந்தரேசன்.

பிறகு, ஆறு மாதம் கழித்து மறுபடியும் ஆரம்பித்தாள்.

"கர்ப்பம் கலைஞ்சு போச்சாம். ரொம்ப வீக்கா இருக்கா. யாருக்கா இருந்தாலும் உடம்புக்கு முடியலைன்னா மனசு அம்மாவைத்தான் தேடும். போன்ல அழும்போது கஷ்டமா இருக்கு..."

சூடான அடையை தட்டில் போட்டு விட்டு அவர் முகத்தையே பார்த்தாள். இலேசான சலனம்கூட தெரியவில்லை. அப்புறம் கூப்பிட்ட குரலுக்கு பதிலில்லாமல் வந்து நிற்பாள். பேச்சை வெகுவாகக் குறைத்துக்கொண்டு தன் கடமையை மட்டும் செவ்வனே செய்ய முயற்சி செய்தாள். அதற்கும் சுந்தரேசன் அசைந்து கொடுக்கவில்லை. இப்போதெல்லாம், இந்து பற்றி பேச்செடுப்பதேயில்லை ராஜி.

ஒரு நாள் மத்தியான வேளையில் வாசற்கதவருகே நிழலாட, எழுந்து போய்ப் பார்த்தார் சுந்தரேசன். ஒரு கையில் கனத்த பையுடனும், ஆறேழு வயது பையனுடனும் இந்துமதி நின்று கொண்டிருந்தாள். விருட்டென்று இடத்தைவிட்டு அகன்று விட்டார். முக்கால் மணி கழித்து "ராஜி!" என்ற குரலுக்கு வந்து நின்றவளை ஏறிட்டும் பார்க்காமல், "இனிமே அவ எப்ப வந்தாலும் கொல்லப் பக்கமா தான் வரணும்"

தீர்மானமாய்ச் சொல்லிவிட்டு போய்விட்டார்.

அன்றிரவு சாப்பாட்டுக்குப் பின் இளசான வெண்ணரிக்காய்களில் நான்கை வகுந்து உப்புத் தடவி நீட்டினாள் ராஜி. இதுபோன்ற சுவையான காய்கள் திருச்சி, தஞ்சாவூர்ப் பக்கங்களில்தான் நன்றாய் இருக்கும். சில சமயங்களில் பொரிவிளங்காய் உருண்டைகள், ரஸ்தாளி என அவருக்குப் பிடித்தமானவை வந்து கொண்டே இருந்தன.

அரசல் புரசலாய் அடுப்பங்கரைப் பேச்சுக்களிலிருந்து இந்து திருச்சிக்குப் பக்கத்தில் இருப்பதும், இரண்டே அறைகள் கொண்ட ஓட்டு வீட்டில் கஷ்ட ஜீவனம் நடத்துவதும் அவளுக்கு அதற்குப் பிறகு குழந்தைகள் இல்லை என்பதும் காதில் விழுந்த செய்திகள். அதற்குமேல் அவருக்கு யோசனை போகவேயில்லை. முயற்சித்தாலும்கூட அந்தக் கடுமையான கற்கதவு உள்ளே இன்னும் இறுகிக் கொண்டதே தவிர இளகவில்லை. தன் மூத்த பெண்ணை முகத்துக்கு நேராய் இன்று பார்க்க நேரிட்டால்கூட அவருக்குப் பேச வராது. "அம்மாடி!" எனத் தலைவருடி அருகில் அமர்த்திக்கொள்ள இயலாது. பழுப்பதற்குள்ளேயே கீழே விழுந்த காய்போல கடுத்துப் போய் விட்டிருந்தது. தந்தை - மகள் உறவு. அதைத் தன் கடுமையின் மூலம் மேலும் ஒட்ட துண்டித்து விட்டார் சுந்தரேசன். ராஜி தான் இன்னும் ஒப்புக் கொள்ள மறுக்கிறாள். நிறைய பணம் வரும்போதெல்லாம், பெண்ணுக்காக அவர் மனது இளகும்; கை நீளும் என நம்பிக்கை சேர்த்து வைத்திருக்கிறாள்.

ஆழ்மனதின் குமைச்சல் தவிர்த்து நிறைய வெளியுலகம் சார்ந்த பிரச்னைகளும் சுந்தரேசனுக்கு இருந்தன. கூட வேலை பார்க்கிற நண்பர்கள் கூட்டத்தில் பெண் கல்யாணம் வருகிறபோது அவர்கள் முகத்தில் தெரிகிற மகிழ்ச்சி,

சுதா ரகுநாதன் அடிக்கடி வெளிநாடு சென்று அங்குள்ள தமிழர்களுக்கு இசை பயிற்றுவித்து வருகிறார்.



இசை

கடமையைச் சரியாய் செய்த திருப்தி. அடுத்த வருடமே தாத்தாவாகிவிட பரபரக்கிற எதிர்பார்ப்பு, பெண்ணைக் கொண்டு பிறந்த வீட்டில் வைத்துக் கொண்டு செய்கிற சீராடல்... இவையெல்லாமே தனக்குக் கிட்டவியலாத உணர்வுகள் என உணரும்போது மிதிபட்டுப் போனது தகப்பன் ஸ்தானம்.

இந்துவைக் காட்டிலும் சம்பத்தின் மீது உள்ள வெறுப்பு வண்டி மசிபோல துடைக்க முடியாமல் மனது முழுக்க அப்பிக் கிடந்தது. எங்கிருந்தோ வந்து தன் சந்தோஷத்தை இனுக்கு விடாமல் பறித்துக்கொண்டு போய்விட்ட அவன் மேல் வெறுப்பு கசந்தது.

இன்றும் அந்த மங்கின முன்மாலைப் பொழுதும், அவளுக்காய் ஆசையாய் வாங்கி வந்த இரண்டு முழ வாசமுல்லையும் அன்றைய அவளின் செயலை அறியாதவை போல வாடி வதங்கியது சுந்தரேசனுக்குக் கண்ணிலிருந்து மறையாத காட்சியாகிவிட்டது.

எப்போது கொல்லைப் பக்கம் அரவம் கேட்டாலும், சட்டென தன் வார்த்தைகளின் கடுமை தனக்கே உரைத்து உடல் முழுதும் பரவினாற்போல சடுதியில் படியிறங்கி பக்கவாட்டு நீள்சந்தில் நடந்து முக்கு ராமர் கோயிலின் அகண்ட பிரகாரத்தில் உட்கார்ந்து சத்தமெழுப்பாது மருகிக் கொண்டிருப்பார். ராஜிக்கு இது போன்ற மனக் கசிவுகள் எப்போதுமே கிடையாது. அவளுக்குத் தான் பெற்றதுகள் சந்தோஷமாய், சௌகரியமாய் இருக்க வேண்டுமென்கிற எண்ணம்தான். அது மட்டுமேதான்.

இரவுச் சாப்பாட்டுக்கு ராஜி கூட்ட நாட்டுக் கத்தரிக்காய் செய்திருந்தாள். மழமழவென பார்க்கும்போதே அதன் சுவையை உணர முடிந்தது. ஆனால் உண்ணத்தான் முடியவில்லை. கத்தரிக்காய்க்குள் மீன்முள் எடுப்பவர்போல் சுந்தரேசன் கோதுவதும் களைவதுமாய் இருந்தார். எழுந்தபோது பக்கென மின்சாரம் நின்றிருந்தது. வாசற்பக்கமாய் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டார். சற்று நேரத்தில் உள்ளே சன்னமாய்ப் பெண் குரல்கள் கேட்டன. இந்துவின் குரல் தொடர்ந்து விசும்பல் ஒலியும் ராஜியின் தழுதழுப்பான குரலும் கேட்டது.

"எல்லாம் தானா மாறும்" ராஜி சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள்.

ஆமாம்! எல்லாமே ஒரு நாள் மாறத்தான் போகிறது. சம்பத்தும் இந்த வீட்டுக்கு வந்து கூட்ட கத்தரிக்காய் விண்டு தின்பான். அவன் பெற்ற குழந்தைகள் அரை டிராயரும் கவுனுமாக சாய்வு நாற்காலியிலும் வாசற்திண்ணையிலும் ஏறி ஓடும். இந்து தன் தலையில் ஒற்றைக் கிள்ளு முல்லைப் பூவை வருடியவாறு தான் பெற்றதையும் வளர்த்ததையும் அதீத தாய்ப் பாசத்துடன் சமையலறையின் வாசற்படியிலமர்ந்து கொட்டியளந்து கொண்டிருப்பாள். அவரது வெறுப்பும் வைராக்கியமும், பலனற்று பாம்பு உரித்துப் போட்ட சட்டை போல உயிரற்றுப் போயிருக்கும்.

இருள் சூழ்ந்திருந்த தனிமையின் பிடியில், முடிவு தெரியாத கேள்விகளுடனும், வெளிச்சொல்லவியலாத மௌனத்தின் அழுத்தத்துடனும் அமர்ந்திருந்தார் சுந்தரேசன். ராஜி ஏற்றி வைத்திருந்த அரிக்கேன் விளக்கின் வெளிச்சம் மங்கத் தொடங்கியிருந்தது. ஆனால், முல்லைப்பூவின் வாசனை மட்டும் அவர் நெஞ்சிலிருந்து என்றைக்கும் அகலாது என்று தோன்றியது. ●

## ஜானி



கடந்த பதினைந்து வருடங்களாக வளர்த்து வந்த 'ஜானி' என்கிற நாயை அண்மையில் பறிகொடுத்த சோகத்தில் இருக்கிறார் ஓவியர் மருது.

சர்ச்சைகளெல்லாம் ஒருவழியாக ஓய்ந்து, நிம்மதிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார் த்ரிஷா. விடுவோமா? சந்தித்தோம்.

**அஸின், நயன்தாரா போன்ற கேரள வரவுகளால் உங்களுக்குச் சிக்கலாகி விட்டதோ?**

"என்ன நினைச்சுட்டீங்க? வருஷத்துல வர்ற நூறு தமிழ்ப் படங்கள்லயும் என்னையே நடிக்கச் சொல்றீங்களா? இதோ என்னைத் தெலுங்குல தலையில தூக்கி வைச்சுக் கொண்டாடுறாங்க. அதுபோலத் தானே இங்கே அஸினும் நயன்தாராவும். நம்மூருக்கு வர்ற எல்லா கேரள வரவுகளும் அழகா இருக்காங்க. நல்லாவும் பண்றாங்க. 'கஜினி'யை பாருங்க, அஸின் என்னமா பிரமாதப்படுத்தியிருக்காங்க. வருஷத்துக்கு மூணு தமிழ், மூணு தெலுங்குப் படங்கள் பண்றதுதான் என் ப்ளான். தமிழ்ல ஆதி (விஜய்), சம்திங் சம்திங் (ரவி), ஆறு (சூர்யா) ன்னு மூணு பெரிய படங்கள் பண்றேன். இதுக்கு மேலே வேற என்ன வேணும்?"

**தெலுங்கில் தொடர்ந்து அசத்துகிறீர்களே...?**

"பின்னே! 'கஜினி' இயக்குனர் ஏ.ஆர். முருகதாஸ், சிரஞ்சீவியை வெச்சு பண்ற தெலுங்குப் படத்துல நான்தான் ஹீரோயின். பிரபுதேவாவோட அடுத்த படமான 'பௌர்ணமி'யில ப்பா... செம கேரக்டர். தமிழ்லதான் நல்ல கேரக்டர்களுக்காக தவம் கிடக்கிறேன். ஆனா, தெலுங்குல அப்படி யில்லை. த்ரிஷாவுக்குக் கொடுத்தா செமத்தியான கேரக்டர்தான் தரணும்னு முடிவு பண்ணிட்டுதான் கதை சொல்லவே வர்றாங்க. தெலுங்கு மாதிரி தமிழ்லயும் இனி அழுத்தமான கேரக்டர்கள்ல மட்டும்தான் நடிக்கறதுன்னு முடிவு பண்ணிட்டேன். 'திருப்பாச்சி' மாதிரி சாதாரண வேஷத்திலெல்லாம் இனி த்ரிஷா நடிக்க மாட்டா."

**'முணுக்'கென்றால் தப்பான முடிவெடுத்து, உயிரை விட்டுவிடும் அளவுக்குப் போய்விடும் திரையுலகில், இத்தனை சர்ச்சைகளையும் எப்படித் தாங்குகிறீர்கள்?**

"இன்டர்நெட்ல 'த்ரிஷா குளியல்'ங்கிற பெயர்ல அவதூறான ஈமெயில், உலகம் முழுக்கப் பரவிட்டிருக்கு. அமெரிக்காவிலிருந்து 'அகிலா'ங்கிற என் ஃப்ரெண்ட் இந்தத் தகவலை போன் பண்ணிச் சொன்னா. எதுக்கும் அசராம இருக்கிற என் அம்மா, 'பாவிகளா இப்படியுமா பண்ணுவீங்க!'ன்னு வயிறெரிஞ்சு புலம்புறாங்க. 'ஓ... அப்படியா சேதி'ன்னு கேட்டுட்டு, என் ரூமுக்குப் போய் டெடி பியரை கட்டி அணைச்சுக்கிட்டு தூங்கிட்டேன், இன்ஃபாக்ட் அன்னைக்கு ரொம்ப நல்லா தூக்கம் வந்துச்சு (சிரிக்கிறார்). யூ நோ, இந்த விஷயம் தேசிய அளவுல பாப்புலராகி, ஸ்டார் டிவிவிலிருந்தெல்லாம் பேட்டி எடுக்க வந்துட்டாங்க.



# "ரஜினியோடு நடிக்க முடியாது!"

(மீண்டும் சிரிப்பு). பார்க்கத்தான் பூனை மாதிரி இருப்பேன். ஆனா எனக்கு செம தைரியம்ங்க. பையன் மாதிரிதான் என்னை வீட்ல வளர்த்தாங்க. அதனால தலையில இடியே விழுந்தாலும் கவலையில்லை."

**சரி, ஈ.சி.ஆர். ரோடு...**

"தொடர்ந்து எனக்கு மட்டும் பிரச்னைகள் வர்றதைப் பார்த்தா என் பேர், புகழை ஜீரணிக்கக்க முடியாதவங்க யாரோ என்னைக் கீழே தள்ள முயற்சிக்கறாங்களோன்னு சந்தேகமாத்தான் இருக்கு. ஒரு வேளை இது உண்மையா இருந்தா, அவங்களுக்கு பெரிய ஸாரி சொல்லிக்கறேன்.



## –த்ரிஷா பளிச்!

பிரச்னைகளுக்கு அப்புறமாத்தான் என் மார்க்கெட் ஸ்டடியா போய்ட்டு இருக்கு.

ஈ.சி.ஆர். பிரச்னையையே எடுத்துக்குங்க.. இன்னைக்கு நைட்ஷோ படம் பார்த்துட்டு சத்யம் தியேட்டரிலிருந்து தனியா எத்தனை பொண்ணுங்க அந்நேரத்துக்கு வீட்டுக்குப் போறாங்க தெரியுமா? என்னால பகல்ல சுதந்திரமா எங்கேயும் போக முடியுமா? எந்தப் பிரச்னைகளுக்கும் பயந்துட்டு வீட்டை விட்டு வெளியில போகாம எல்லாம் இருக்கிறதில்லை. இப்பவும் அதே ஈ.சி.ஆர். ரோட்டுப் பக்கம் அடிக்கடி போயிட்டு வந்துட்டுதான் இருக்கேன்."

**ரஜினிக்கு ஜோடியாக 'சிவாஜி'யில் நடிக்க நீங்கள் ஆசைப்பட்டதாகவும் சைக்கிள் கேப்பில் ஸ்ரேயா அந்த வாய்ப்பைத் தட்டிவிட்டதாகவும் பேசப்படுகிறதே...**

"இதுல வருத்தப்பட ஒண்ணுமே இல்லையே. ஸ்ரேயா என் பெஸ்ட் ஃப்ரெண்ட். 'மழை' மாதிரியே 'சிவாஜி'யிலும் ஸ்ரேயா அசத்துவாங்க பாருங்க. அப்புறம் ஒரு வேளை 'சிவாஜி'யில ரஜினிக்கு ஜோடியா நடிக்க வாங்கன்னு கூப்பிட்டிருந்தாலும் 'என்னால முடியாது'ன்னுதான் சொல்லியிருப்பேன். ஏன்னா தமிழ் - தெலுங்குன்னு அடுத்த ஏப்ரல் வரைக்கும் என் கால்ஷீட் டைரிதான் நிரம்பி வழியுதே!"

**- ச.ந.கண்ணன்**

தி.நகர் ரங்கநாதன் தெரு இருக்குதே... அதுக்குள்ள ஒருத்தரு குண்டு கல்யாணமாட்டம் போனா, ரிட்டன் வர்றப்போ ஓமக்குச்சி நரசிம்மனா மாறிடுவாரு. இன்னும் தீபாவளின்னா கேட்கணுமா... சரி... ஒரு ரவுண்டு அடிச்சுட்டு, அப்படியே பர்சேஸையும் முடிச்சுடலாம்னு கிளம்பினேன்.

ஒரு இண்டு இடுக்கு விடாம கடை கட்டி வச்சிருக்காங்கப்பா... கையில மூட்டை முடிச்சோட வந்த ஃபேமிலி கிட்ட போயி, ''எப்படி இருந்துச்சு தி.நகர் டிரிப்?''புன்னு கேட்டா, அவங்களுக்கு நம்ம கேப்டனைவிட அதிகமா கண்ணு செவக்குதப்பு...

''அட போப்பா...ஏண்டா வந்தோம்னு இருக்கு... காலைல பத்து மணிக்கு வந்தோம்... உள்ள போறதுக்கே பதினொரு மணி ஆயிப்போச்சு. ஒவ்வொருத்தருக்கும் தனித்தனியா வாங்கி, அதை பில்லு போட்டு, வெளில வர்றதுக்குள்ள போதும் போதும்னு ஆயிடுச்சி... இதுல ரெண்டு தடவை பேரனையும், ஏழு தடவை என் மருமகளையும் தொலைச்சுப்புட்டோம்... போலீஸ்கிட்ட சொல்லி, அவங்களை மீட்கறதுக்குள்ள... அடேயப்பா...'' மூச்சு வாங்குச்சுப்பா அவருக்கு...

இந்த ரங்கநாதன் தெருவுல டோட்டலா மூணு பிராப்ளம் இருக்குது. ஒண்ணு இடிராஜாக்கள் தொல்லை. லேடீஸை உரசுறதுக்காகவே ஒரு கூட்டம் இங்க வருது... இவங்க வேலையே இந்த முனையிலிருந்து அடுத்த முனை வரைக்கும் போயிட்டு ரிட்டர்ன் வர்றதுதான்... ரெண்டு, பிக்பாக்கெட் பசங்க. தனித்தனியா பணத்தை பிரிச்சிவச்சி நாமளே பாதுகாத்துக்கிட்டாத்தான் உண்டு. வீடியோ கேமராவ்லாம் வச்சு, கண்காணிக்கறதா போலீஸ்காரங்க சொல்றாங்க... ஆனாலும் 'பர்ஸை

# ரங்கநாதன்



பதம் பார்த்துட்டாங்களே'ங்கற குரல் கேட்டுக்கிட்டேதான் இருக்கு...

மூணாவது பிரச்னை, ரொம்ப முக்கியமானது. தெரு ரொம்பக் குறுகலா இருக்கறதால திடுதிடுப்புன்னு எதுனா தீ விபத்து நடந்தா, ஜனங்க பீதியில சிதறி ஓடுவாங்க... மாற்றுப் பாதை எதுவும் பெருசா இல்ல... இதை மட்டுமாச்சும் கொஞ்சம் கரெக்ட் பண்ணினா ரொம்ப புண்ணியமாப் போவும்.



இங்கதான் இவ்ளோ கூட்டமா இருக்குதே... நம்ம ஹைடெக்கு ஸ்பென்சர் பிளாசா எப்படி இருக்குன்னு 'லுக்'விட கிளம்பினேன்... கையில செல்லு, பாக்கெட்ல

# தெரு 1,2,3....

கிரெடிட் கார்டு, காதுல ஹெட்போனு, வாயில பீட்டரிங் இல்லாம அதுக்குள்ள நுழையவே முடியாது போல...

ஹைஹீல்ஸ், ஸ்லீவ்லெஸ்ஸ், ஷார்ட் கடின்னு அம்புட்டு பேரும் அவ்ளோ ரிச்சால்ல இருக்காங்க. எஸ்கலேட்டர்ல ரெண்டு ரவுண்டு அடிச்சுட்டு, ஒரு கடைக்கார குறுந்தாடிகிட்ட, "என்ன சார்... இங்க வர்ற பார்ட்டிங்க மாதிரி வியாபாரமும் ரிச்சாத்தானே போவுது"ன்னா மனுஷன் செம ஃபீலிங்காயிட்டாரு.

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லப்பா... ரிச்சா இருந்தாலும்கூட யாரும் பார்கெயின் பண்ணாம பர்சேஸ் பண்றதில்ல.. இங்க வர்ற கூட்டத்துல பாதிக்குப் பாதி கடலை போட வர்ரதுங்கதான். பலபேர் இந்த இடத்த மீட்டிங் ஸ்பாட்டாத்தான் யூஸ் பண்றாங்க"ன்னு ரொம்பவே வேதனைப் பட்டார்.

அவரு சொன்னத உண்மையாக்கற மாதிரி என் கண்ணு முன்னாடியே ஒரு காட்சி... ஒரு கடையில நுழைந்த ஜோடியில, பொண்ணு கடிகார் கேட்டா. பையன், முடிஞ்ச வரைக்கும் பேரம் பேசினான். கடேசில வாங்காமலே ரெண்டு பேரும் வெளில வந்து உரசிக்கிட்டே ரொம்ப நேரம் சும்மா சுத்திட்டு கிளம்பிட்டாங்க.

எப்படி இருக்கு பாருங்க உலகம்!

- ஒற்றன்

படங்கள்: ஸ்ரீஹரி



# Harry Potter
## AND THE GOBLET OF FIRE

**DIWALI!** Special Features Plus Board Game

AND MUCH MORE.....

# GOKULAM

NOVEMBER 2005
Rs.8/-only

THE Magazine for Children

For Subscriptions mail to : Gokulam, Kalki Buildings, 47- NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai-600 032
E-mail:subscription@kalkiweekly.com

## நீங்கள் கேட்டவை
—தராசு



✱ ஒப்பு நோக்கலாம்!

# பண்ருட்டியார் நுழைவு பலமா? பலவீனமா?

● பி.பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி

? நடிகர் சங்கத்தை அரசியல் தலைவர்கள் தங்கள் சுயலாபத்துக்குப் பயன்படுத்துவதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

! நான் ஆதரிப்பதும் எதிர்ப்பதும் கிடக்கட்டும்; நடிக நடிகையர்கள் அல்லவா அதை முதலில் பலமாக எதிர்க்க வேண்டும்... எல்லோரும் வாய் மூடிக் கொண்டிருப்பது சங்கத்துக்கு நல்லதல்ல.

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? மக்களுக்கு அளித்த வாக்குறுதியில் 75 சதவிகிதம் நிறைவேற்றிவிட்டோம் என்று மன்மோகன்சிங் கூறியிருக்கிறாரே?

! திட்டங்களை அறிவித்தால் வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டதாகக் கணக்கில் கொள்ள முடியாது. அவரைப் பொறுத்தவரை லிஸ்டில் 'டிக்' அடித்துக் கொள்ளலாம். பயன், மக்களைச் சென்றடைய வேண்டாமா!



✱ புருவங்கள் உயரலாம்!

● சியாமளா ஈஸ்வரன், தேவூர் மேட்டுக்கடை

? பா.ஜ.க.விலும் கோஷ்டிப்பூசல் தலைவிரித்தாடுகிறதே?

! உட்கட்சி ஜனநாயகம் அரங்கம் ஏறாத வரை



✱ 'டிக்' அடிக்கலாம்!

கோஷ்டிப் பூசல்கள் எல்லா கட்சிகளிலும் தலைவிரித்தாடவே செய்யும். ம.பி.யில் உமாபாரதி ஆடுகிற ஆட்டம் ஒன்று போதும், பா.ஜ.க. மைனஸ் அத்வானி என்ன நிலைக்குத் தள்ளப்படும் என்பதை உணர்த்த.

● **ஆரூர் சேகர், சென்னை - 26**

***? கல்கியை சந்தா செலுத்திப் பெறுவது, கடையில் காசு கொடுத்து வாங்குவது - எது சிறந்தது?***

! நீங்கள் காசு கொடுத்து வாங்கி விட்டு, நண்பர் அல்லது உறவினருக்குப் பரிசாகச் சந்தா செலுத்துவதே மிகச் சிறந்தது.



● ஊர்வலம்...

● ... விடலாம்!



● **மல்லிகை மன்னன், மதுரை - 17**

***? இளங்கோவன் வீட்டுக்குக் கழுதைகள் ஊர்வலம், வாசன் வீட்டுக்குப் பன்றிகள் ஊர்வலம் நடத்தப் போவதாக காங்கிரஸ் கட்சியினர் எச்சரிக்கை விடுத்திருப்பதைப் பற்றி அறிந்து காந்தியடிகளின் ஆத்மா என்ன பாடு படும்?***

! 'அதற்குத்தான் அப்போதே காங்கிரஸைக் கலைக்கச் சொன்னேன். கேட்பாரில்லை' என்று விவேகத்துடன், விரக்தி அடையாமல் இருக்கும் அவர் ஆத்மா.

● **கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்**

***? சென்னை மக்கள் இப்போது உபயோகிப்பது வீராணம் தண்ணீர் தானே சார்...?***

! வீராணம் + கிருஷ்ணா + பூழலேரி + மழைத்தண்ணீர் + கடல்நீர் கலந்துவிட்ட நிலத்தடி நீர் + ஆங்காங்கே கலக்கும் சாக்கடை நீரும்தான்!

● **ச.ஜான் பிரிட்டோ, திண்டுக்கல்**

***? 'முயல் வளர்த்து முதலாளியாகலாம்' என்ற வார்த்தை ஏற்படுத்திய ஆசையால் தொழிலில் இறங்கி பல ஆயிரங்கள் இழந்து அனுபவக் கணக்கில் பற்று வைத்துள்ள எனக்கு, ஆறுதலாக ஏதாவது சொல்லுங்களேன்..?***

! கையைக் கொடுங்க ஜான் பிரிட்டோ! யாருக்கும் கிடைக்காத அனுபவ அறிவு கொட்டிக் கிடக்கிறது உங்களிடம். தொடர்ந்து உழைத்து முன்னேறியவர்களின் கதைகளை ஆழ்ந்து படியுங்கள். கீழே விழாமல் மேலே எழுந்தவர் எவருமில்லை தோழரே.

● **இரா.சக்கரபாணி, மதுரை**

***? நான் பக்குவம் அடைந்துவிட்டேன் என்று கூறும் முதல்வர், சட்டமன்றத்தில், 'ஆண்டிப்பட்டி தொகுதிக்கு அரசு இதுவரை எவ்வளவு நிதியைச் செலவழித்தது?' என்று ஒரு காங்கிரஸ் உறுப்பினர் கேட்டதற்காகப் பொறுமையிழந்து, 'முதலில் அமேதி தொகுதியில் எவ்வளவு நிதி செலவழிக்கப்பட்டுள்ளது என்று கேட்டுச் சொல்லுங்கள்!'' என பதில் அளித்துள்ளாரே?***

! சபாஷ்! அரசியலில் பக்குவமடைந்த தன் பிரதிபலிப்புத்தான். அமேதியில் நடக்கும் தவறுகள், ஆண்டிப்பட்டி தவறுகளுக்கு லைசென்ஸ் வழங்குவதாகக்

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
சோம. தேவராசன்,
2/365, செட்டித் தெரு,
(மாடி எண் எட்டு)
நாச்சியார்கோவில் - 612 602

* ரூ.50 பரிசு பெறுபவர் :
பொன். இளவேற்கோ,
5, சிறுத்தொண்டன் தெரு,
இரண்டாவது குறுக்குச் சாலை,
மணவாள நகர் - 602 002.

கருதினால், இன்னும் கூட இன்றைய அரசியல் போக்கில் பக்குவப்பட்டுப் போனவர் ஆவார்!

● **ஆர்.எஸ். லக்ஷ்மி, கோவை**

***? 'சித்தி', 'அண்ணாமலை', இப்போது 'செல்வி' என்று அனைத்து தொடர்களி லும் ராதிகா ஒரே மாதிரி முகபாவத் துடன் நடிப்பது சலிப்பு ஏற்படுத்து கிறதே?***

! அதை யார் கண்டுக்கறாங்க. டி.ஆர்.பி. ரேட்டிங் ஒரே மாதிரி இருக்கா... அதுதான் வேண்டும்!

● **ஏ.சுகுமார், காட்பாடி**

***? கேப்டன் மாறி விடுவதால் இந்திய கிரிக்கெட் அணி விஸ்வரூபம் எடுக்க முடியுமா?***

! விஸ்வரூபம் எடுக்கிறதோ இல் லையோ, வாமன அவதாரத்தில் நிலைத்து விடாது என்று நம்பலாம். ஆனால் ஒன்று, 'டெம்பரரி கேப்டன்' என்று அறிவித்தால், அவர் எப்படி சகாக்கள் மீது முழு ஆளுமை செலுத்த முடியும்? யோசிக்க வேண்டாமா?

● **அ. ராதா, பொன்னன் திட்டு**

***? 'ஜனாதிபதியாக எனக்குக் கிடைத்த மிகச் சிறந்த அனுபவம் ஆறு லட்சம் மாணவர்களைச் சந்திக்க முடிந்ததுதான்' என அப்துல் கலாம் கூறியுள்ளாரே?***

! மிக மோசமான அனுபவம், தூக்குத் தண்டனை பெற்ற கைதிகளின் கருணை மனுக்கள் மீது தீர்ப்பு வழங்க வேண்டி யிருந்ததுதான் என்றும் அறிகிறோம்.



* ஆட்டம் போடலாம்!



* இரட்டை இழப்பு!

● **சோம தேவராசன், நாச்சியார் கோயில்** ☐

***? தே.மு.தி.க.வில் பண்ருட்டி இணைந் துள்ளது அக்கட்சிக்குப் பலமா? பலவீனமா?***

! அவருடைய அரசியல் அனுபவம் பலமாக இருக்கும்; அவருடைய அஞ்ஞாத வாசம் பலவீனமாக இருக்கும். திடீர்ப் பிரவேசமும் திடீர்ப் பதவியும் புருவங் களை உயர்த்தச் செய்யும்.

● **பொன். இளவேற்கோ, மணவாள நகர்** ★

***? மக்களின் வரிப்பணம்தான் எனி னும் அதை முறையாக அதே மக்களின் நன்மைக்காகத்தானே முதல்வர் பயன்படுத்தி வருகிறார்?***

! (அ) பட்டணத்தில் மட்டுமின்றி கிரா மப்புறங்களிலும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும் விதமாக அரசு செயல்பட வேண்டும். இதற்கு இலவசங்கள், நலத்திட் டங்கள் மட்டுமே போதாது. ஆ) மக்களிட மிருந்தே பணத்தைப் பெற்று மக்களுக்கே வழங்கிவிட்டு, ஏதோ சொந்தக் காசைச் செலவிட்டதுபோன்ற தொனியில் திட் டங்கள் விளம்பரப்படுத்தப்படுகின்றன. இவை இரண்டும் எளிய மக்களை எளிதில் ஏமாற்றும்.

● **கே.வி.ராமன், சென்னை - 73**

***? கர்நாடக இசைப் பாடகர் மதுரை என்.கிருஷ்ணன் மறைவு குறித்து...?***

! நாட்டிய மேடைக்கும் நிறையப் பங்களித்தவர் என்பதால் இரட்டை இழப்பு!

இளங்கோவனுடன் சண்டை, வீட்டில் திருட்டு... என்று சமீபகாலமாக அடிக்கடி செய்திகளில் அடிபட்டு வருகிறார் எஸ்.ஆர்.பி. நாம் சந்தித்தபோது எவ்வித பரபரப்புமின்றி, அமைதியாகப் பேசினார்.

**ஐம்பதாண்டு சாதனைகளை ஐந்தே ஆண்டுக்குள் செய்துவிட்டதாகக் கூறுகிறாரே முதல்வர் ஜெ...?**

கடந்த நான்கு வருடங்களாக ஒன்றும் செய்யாமல் சும்மா இருந்துவிட்டு, தேர்தல் பயத்தில் கடந்த நான்கு மாதங்களாக சில அறிவிப்புகளைச் செய்துவிட்டு, சாதனை நிகழ்த்திவிட்டதாகக் கூறுவது வேடிக்கையானது. அவர் வெளியிட்ட அத்தனை அறிவிப்புகளும், தன்னைத் தற்காத்துக்கொள்ளும் நோக்கத்தில் வெளிவந்தவைதான். இவை தேர்தல் சமயத்தில் வெட்டவெளிச்சமாகும்.

**உங்கள் கூட்டணியை உடைக்கும் அளவுக்கு நீங்கள் பலவீனமாகவா உள்ளீர்கள்?**

நாங்கள் பலமாக இருக்கிறோம். அதனால்தான் கூட்டணியை உடைக்க மறைமுக சதி செய்கிறார்கள். ஆனால் அது முறியடிக்கப்படும்.

**தமிழக காங்கிரஸ் நிர்வாகிகள் பட்டியல் அறிவிக்கப்படாததால் தேர்தல் பணிகள் முடங்கிவிட்டதாகச் சொல்லப்படுகிறதே?**

இல்லை... பூகம்பம், தசரா போன்ற சின்ன இடையூறுகள் இருக்கின்றன. விரைவில் நிர்வாகிகள் முறைப்படி அறிவிக்கப்படுவர். அதன்பிறகு தேர்தல் பணியை முழு வீச்சில் தொடங்கிவிடுவோம்.

**கராத்தேவைக் கட்சிக்குள் கொண்டு வருவது கூட்டணிக்குள் அதிருப்தியை ஏற்படுத்தாதா..? மேம்பால ஊழல் விவகாரத்தில் மிகவும் ஆர்வமாக, வேகமாக அவர் செயல்பட்டாரே...?**

அதற்கும் இதற்கும் எந்தச் சம்பந்தமுமில்லை. புகார் கொடுத்தது அப்போது ஆணையராக இருந்த ஆச்சார்யலுதான், கராத்தே அல்ல.

**'கட்சிக்குள் இளைஞர்களுக்கு வாய்ப் பளிக்க வேண்டும். மூத்தவர்கள் வழி விட வேண்டும்' என்கிற கருத்து பற்றி...?**

வரவேற்க வேண்டியதுதான். ஆனால் அனுபவம் இல்லாதவர்களை மட்டுமே வைத்து கட்சியை நடத்த முடியாதே. இளமைத் துடிப்பு கொண்டவர்களும், பழுத்த அனுபவம் உள்ளவர்களும் இணைந்து செயல்பட்டால்தான் நன்றாக இருக்கும். முழுக்க மூத்தவர்களைப் புறக்கணிப்பது நற்பயனைத் தராது.

- கலை



# காங்கிரசில் கராத்தே... கூட்டணியில் சிக்கலா?

## -எஸ்.ஆர்.பி.பதில்



# "அ.தி.மு.க. கூட்டணிக்கு முயற்சிக்கிறது!"

## —பா.ம.க. பகீர்

**அன்புமணி மீதான ஊழல் புகார், பா.ம.க. வட்டாரத்தில் பற்றி எரிந்து கொண்டுள்ளது. இது பற்றி கேட்டது தான் தாமதம்... பொங்கியெழுந்து விட்டார் பா.ம.க. தலைவர் ஜி.கே.மணி.**

"பொத்தாம் பொதுவா, கொஞ்சங் கூட ஆதாரமில்லாம எழுதறாங்க. இது ரொம்ப தப்பு. நாங்க கஷ்டப்பட்டு கட்சியை வளர்ப்போம். இவங்க பரபரப்பு, வியாபாரம்னு அவதூறா செய்தி போட்டா எப்படி எங்களால சகிச்சுக்க முடியும்? அதனாலதான் எங்களோட அதிருப்தியை வெளிப்படுத்தறதுக்கு ஆர்ப்பாட்டம் செய்தோம். ஏன் நீங்க சட்டத்தை அணுகாம போராட்டத்துல இறங்கினீங்கன்னு கேட்கறாங்க. இதுக்கு முன்னால ஒரு நாளிதழ் எங்க கட்சியைக் கேவலப்படுத்தற மாதிரி தொடர்ந்து செய்தி வெளியிட்டது. அதை எதிர்த்து நாங்க போட்ட வழக்கு ரெண்டு வருஷமா அப்படியே கிடக்கு. அதனாலதான் ஆர்ப்பாட்டம் செய்ய வேண்டியதாப் போச்சு..." என்றவரிடம், "இதில் அ.தி.மு.க. பழிவாங்கும் நடவடிக்கையில் ஈடுபடுவதாக ராமதாஸ் குற்றம் சாட்டியிருக்கிறாரே" என்றதற்கு,

"ஆமா... பொதுவா இந்த மாதிரி ஆர்ப்பாட்டம் செய்தா, கைது பண்ணி உடனே விடுதலை பண்ணிடுவாங்க. ஆனா எங்களை அப்படிச் செய்யல. கடுமையான கிரிமினல் வழக்குகள் போட்டு, தினமும் காவல் நிலையத்துல கையெழுத்து போடற மாதிரி நிபந்தனை ஜாமீன்ல வெளியே விட்டிருக்காங்க. கைதானது சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினர்கள். இதன் மூலமா எங்களோட பணிகளை முடக்கலாம்ங்கறது அவங்க ஆசை. அது நிறைவேறாது. எங்க பணிகள்ல இனிமே வேகம் கூடத்தான் செய்யும். இது எல்லாத்துக்கும் காரணம், நாங்க அ.தி.மு.க.வோட கூட்டணிக்கு விருப்பப்படல. அவங்க எவ்வளவோ முயற்சி பண்ணியும் நாங்க ஒப்புக்கல... அந்த ஆத்திரத்தோட வெளிப்பாடுதான் இந்த பழிவாங்கும் நடவடிக்கை" என்றவரிடம், "நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள்... ஆனால் முதல்வரோ, எங்களுடன் சில கட்சிகள் கூட்டணி அமைக்க முற்படுகின்றன என்கிறாரே" என்றதற்கு,

"அப்படி முயற்சி எடுத்தது உண்மை என்றால், அது எந்தெந்த கட்சிகள் என்று வெளிப்படையாகச் சொல்ல வேண்டியதுதானே. ஏன் தயங்குகிறார்...?" என்று கேள்வியோடு முடித்துக் கொண்டார் ஜி.கே. மணி.

- முத்து

பி.ஜே.பி. தலைவராக திருநாவுக்கரசரை நியமிக்கப் போகிறார்கள்... 'த்தோ நிய மித்து விடுவார்கள்...' என்றெல்லாம் தொடர்ந்து பேசப்பட்டு வரும் சூழ்நிலையில் நாம் அவரைச் சந்தித்தோம்.

**வரும் சட்டமன்றத் தேர்தலை தமிழக பி.ஜே.பி. தனித்துச் சந்திப்பது விஷப் பரீட்சை என்று தோன்றவில்லையா?**

இந்தத் தேர்தல் தமிழகத்தில் பி.ஜே.பி.யின் வாக்கு வங்கியைத் தெளிவாக்கும் தேர்தல். எங்களுடைய இலக்கு 2011 தேர்தல்தான். ஆகவே, இந்தத் தேர்தலை ஒரு ஆயத்தத் தேர்தலாகவே கருதுகிறோம்.

**விஜயகாந்த் கட்சியுடன் இணைந்து ஏன் நீங்கள் மூன்றாவது அணி அமைக்கக் கூடாது?**

விஜயகாந்த் எப்படி கட்சியைக் கொண்டு போகிறார், தமிழகத்தில் அவர் யாருக்கு ஆதரவான நிலையை எடுக்கிறார், மத்தியில் எப்படிப்பட்ட நிலைப்பாட்டைக் கொண்டிருக்கிறார் என்பதையெல்லாம் உன்னிப்பாகக் கவனித்து வருகிறோம். அது எங்களுக்குச் சாதகமாக இருந்தால், தேர்தல் நேரத்தில் அது பற்றி முடிவெடுக்கலாம்.

**தமிழக பி.ஜே.பி. தலைவராக உங்களை நியமிக்கப் போவதாகச் செய்திகள் வருகின்றனவே...?**

இப்பொழுதிருக்கும் தலைவரது பதவிக்காலம் இன்னும் முடியவில்லை. ஆகவே இதுகுறித்து இப்போது பேசக்கூடாது. இருந்தாலும் எனது திறமைகள், செயல்பாடுகள், செல்வாக்கு ஆகியவற்றை மதிப்பீடு செய்து, நான் தலைவராகச் செயல்பட வாய்ப்பளித்தால், நிச்சயம் என்னால் சிறப்பாகச் செயல்பட முடியும். இதற்கு எம்.ஜி.ஆரிடம் பெற்ற அனுபவம் முதல், இன்றுவரை பெற்ற அனுபவங்கள் கைகொடுக்கும். கட்சியையும் வளர்ச்சிப் பாதையில் செலுத்துவேன்.

**அண்ணா நூற்றாண்டைக் கொண்டாட பி.ஜே.பி. முடிவெடுத்தது தமிழகத்தில் திராவிடக் கட்சிகளின் வாக்குகளைப் பிரிக்கவே என்கிற குற்றச்சாட்டு பற்றி...?**

அது அவரவர் பார்வையைப் பொறுத்த விஷயம். அண்ணாவின் கருத்துகள், செயல்பாடுகள், பழகும் தன்மை ஆகியவற்றால் கவரப்பட்டவர் வாஜ்பாய். அண்ணாவும், வாஜ்பாயும் சிறந்த நாடாளுமன்ற நண்பர்கள். ஆகவேதான் அவரது நூற்றாண்டைக் கொண்டாடுமாறு கூறினார். இதில் வேறு நோக்கமில்லை. ஒருவேளை வாக்குக்காக என்றால், அதில் தவறென்ன இருக்கிறது. வேறு யாரும் வோட்டுக்காக எதுவுமே செய்யவில்லையா என்ன?

**தி.மு.க. கூட்டணி மத்திய அரசின் சாதனைகளையும், அ.தி.மு.க. மாநில அரசின் சாதனைகளையும் சொல்லி வாக்குக் கேட்கும்போது, நீங்கள் எதைச் சொல்லி வாக்குக் கேட்பீர்கள்?**

மத்திய - மாநில அரசுகள் பரஸ்பரம் ஒத்துழைப்பு தராமல் எப்படியெல்லாம் தமிழகம் சீரழிக்கப்படுகிறது, தி.மு.க. - அ.தி.மு.க. பரஸ்பரம் எப்படித் தாக்கிக் கொள்கிறார்கள், கூட்டணித் தலைவர்களைச் சமாளிப்பதில் அவர்கள் படும் அவஸ்தைகள்... இவற்றையெல்லாம் வெட்ட வெளிச்சமாக்குவோம்.

- இரா.முத்துக்குமார்



# "நான் தலைவரானால்...?"

## —திருநாவுக்கரசர் விளக்கம்

முப்பத்து நான்காமாண்டுக் கொண் டாட்டத்தில் திளைத்துக் கொண் டிருந்தது அ.தி.மு.க.வின் தலைமை நிலையம். தொண்டர்களோடு உற்சாக மாக இருந்த கொள்கை பரப்புச் செய லாளர் ஓ.எஸ். மணியனை கொஞ்சம் ஓரம்கட்டினோம்.



# "அம்மா எங்க சொத்து!"

## – உருதுகிறார் ஓ.எஸ்.மணியன்

**கூட்டணியில் வேறு கட்சிகள் இல்லாததால் தேர்தலைச் சந்திப் பதில் தொண்டர்கள் கணக்கம் காட்டுகிறார்களாமே?**

இல்லவே இல்ல... ஏன்னா அம்மா ஏற்கெனவே சொன்ன மாதிரி மக்களோட எங்க கூட் டணி ரொம்ப உறுதியா இருக்கு. அதுக்குமேல வேறென்ன வேணும்? அதனால தொண்டர் கள் ரொம்ப நம்பிக்கையாவும் உற்சாக மாவும் களத்துல இறங்கிட்டாங்க...

**எதிர்கூட்டணியில் ஏழு தலைவர்கள், ஆனால், உங்களிடம் ஒரே தலைவி... எப்படி பிரசாரத்தில் ஈடுகொடுக்க முடியும்?**

ஏன் முடியாது? எங்க அம்மா, ஆட்சி யிலும் சரி, கட்சியிலும் சரி அபரிமித மான மக்கள் செல்வாக்கைப் பெற்றவங்க. அவங்க ஒருமுறை வந்தால் போதும். அப் படியே பொதுமக்கள் மனத்தைப் பறி கொடுத்துடுவாங்க. அப்படிப்பட்ட சொத்து எங்கள் வசம் இருக்கு.

**உங்களது அறிவிப்புகள் வெற்று அறி விப்புகள்தான் என்கிறார்களே எதிர் கட்சியினர்?**

வெறுமனே சொல்லக் கூடாது. புள்ளி விவரத்தோடும் ஆதாரத்தோடும் சொல் லணும். கடுமையான வறட்சியையும் மீறி தொழில் வளர்ச்சி, விவசாயிகளுக்கு நிலவரி ரத்து, கூட்டுறவு கடனான 2568 கோடி ஒத்திவைப்பு, 300 கோடியில் உழவர் பாதுகாப்புத் திட்டம், புதிய வீராணம் திட்டம், மழைநீர் சேகரிப் புன்னு நிறைய சாதனைகள் செய்திருக் காங்க அம்மா. இது மக்கள் மனசுல ஆழமா பதிஞ்சுடுச்சு. அதனால எதிர் கட்சிகளின் பேச்சு மக்களிடம் எடுபடாது.

**மத்திய அரசு பல சாதனைகளை தமிழகத்துக்குச் செய்துள்ளதாகக் கூறுகிறார்களே...?**

தமிழகத்துக்கு நல்ல திட்டங்கள் வந்தா அது அம்மாவுக்கு ஆதரவா அமைஞ் சிடுமோன்னு நினைச்சு, எதிர்கட்சிகள் பல நல்ல திட்டங்களுக்கு முட்டுக்கட் டையா இருக்கறாங்க. இன்னும் சொல் லப்போனா, இந்தக் காரணத்துக்காக செயல்படாமலே இருக்காங்க. உதார ணமா சொல்லணும்னா, வறட்சியால பாதிக்கப்பட்ட மாநிலங்கள் பட்டியல்ல தமிழகத்தைச் சேர்க்கறதுக்கு 39 எம்.பி.க் களும் ஒரு துரும்பைக் கூட நகர்த்தல. இவையெல்லாத்தையும் பிரசாரத்துல எடுத்துச் சொல்வோம்.

- முராரி

படங்கள்: ராஜன்



* ஷோபா

# ஐம்பதிலும் ராகம் வரும்!

**ஷோபா சந்திரசேகரை அவ்வளவு சுலபத்தில் யாரும் மறந்திருக்க முடியாது. நடிகர் விஜயின் தாயார், பாடகி, இயக்குநர் என்று பல முகங்கள் அவருக்கு. அண்மையில் தமது ஐம்பதாவது வயதில் கர்நாடக சங்கீதம் கற்றுக் கொண்டு, 'சமர்ப்பணம்' என்கிற பெயரில் ஆல்பம் ஒன்றை வெளியிட் டிருப்பவரைச் சந்தித்தோம்.**

பேசவே வெட்கப்பட்டவர், "திருமணத்துக்குப் பிறகு கர்நாடக சங்கீதம் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற தாகம் இருந்துகொண்டே இருந்தது. ஆனால் கணவர், குழந்தைகளை கவனித்துக் கொள்ளவே நேரம் போதவில்லை. விஜய்க்குத் திருமணம் செய்து தனிக்குடித்தனம் வைத்தபிறகுதான் நேரம் கிடைத்தது. இரண்டு வருடம் தொடர்ந்து கர்நாடக சங்கீதம் கற்றுக் கொண்டேன்'' என்றார். இவரின் குரு, மகாராஜபுரம் சந்தானத்தின் மகள் பிருந்தா தியாகராஜன்

சரி, எப்படி வந்திருக்கிறது இவரின் 'சமர்ப்பணம்?'

கர்நாடக இசைமேதை, பாலக்காடு கேவி. நாராயணசாமியின் புதல்வி, 'சஹானா' புகழ் அனுராதா கிருஷ்ணமூர்த்தி சொல்கிறார்...

''ஷோபா சந்திரசேகரின் 'சமர்ப்பணம்' கேட்டேன். காஸ்மிக் மியூசிக் வெளியிட்டிருக்கும் இதில், ஐந்து பாரதியார் பாடல்கள் உட்பட மொத்தம் பத்துப் பாடல்கள். ஷோபா அவர்களுக்கு அமரிக்கையான, பணிவான குரல். அவர் எடுத்துக் கொண்டிருக்கும் ஸ்ருதி, கேட்பவர் காதுகளுக்கு மிகவும் ஸ்ராவ்வியமாகவும், இவருக்கு சௌகரியமாகவும் தோன்றுகிறது.

இவர் மந்திர ஸ்தாயியில் (கீழ்ஸ்தாயி) பாடும்போது முணுமுணுக்கிற மாதிரி இல்லை. ப்ளெசண்டாக இருக்கிறது. அதேசமயம் தார ஸ்தாயியில், (மேல் ஸ்தாயி), பாடும்போது ஈஸியாகவும், இயற்கையாகவும் இருக்கிறது. கர்நாடக சங்கீதத்துக்கு முதல் முக்கியமான அம்சம், ஸ்ருதி சுத்தம். அந்தச் சுத்தம் இவரிடம் நன்றாகத் தெரிகிறது. இவருடைய உச்சரிப்பு தெளிவாக இருக்கிறது. இந்த ஆல்பத்தில் இருக்கும் ஏதாவது பாடலின் வார்த்தைகளை எழுதிக்கொள்ள வேண்டுமானால், இதைக் கேட்டே எழுதிக்கொள்ளலாம். இதற்கு உதவியாக, எல்லா கட்டத்திலும் வாத்தியங்கள், பாடகருக்குப் பின்நிழல்போல் வருகின்றன. இதனால் வார்த்தைகளின் அழகு நன்றாகப் பரிமளிக்கிறது.

பின்னணி இசை நன்றாக அமைக்கப்பட்டுள்ளது. இவருடைய குரலுக்கு ஏற்றாற்போல் ட்யூன் செய்திருக்கும் மியூசிக் கம்போஸருக்கு ஒரு தனி கரகோஷம்.

ஷோபா சந்திரசேகர் ஒரு நல்ல குருவின் பயிற்சியின் மூலமும், அவருடைய சாதகத்தின் மூலமும் கர்நாடக சங்கீதத்தில் நல்ல நிலையை நிச்சயமாக அடையலாம். அவரின் கர்நாடக இசைப் பயணத்துக்கு எனது நல்வாழ்த்துக்கள்."

**- ஜெய்**

படம்: **டிஜி. சண்முகம்**



* அனுராதா கிருஷ்ணமூர்த்தி

# போட்டுத் தாக்கு!

ஐஸ்வர்யாராயிடம் கேட்கக்கூடாத பத்து கேள்விகள்:



1. எந்த ஜூவுக்குமே போறதில்லையாமே... ஏன், 'மான்' இருக்குற பயமா?

2. தமிழ்ல உங்களுக்குப் பிடிச்ச ஒரே நடிகர் விவேக்தானே...?

3. உலக அழகிப் பட்டம் கொடுத்தா, எழவு விழுந்த மாதிரி ஏன் எல்லாரும் வாய்ல அடிச்சுட்டு அழறீங்க?

4. மன்னாதி 'மன்னனை'யே மண்ணைக் கவ்வ வைக்குற வித்தையை எங்க கத்துக் கிட்டீங்க?

5. தவமாய் தவமிருக்கிறது சேரன் படம். ஆனா நீங்க 'ரஜினி அடம்'னு உல்டா பண்ணிச் சொல்றீங்களாமே... உண்மையா?

6 ஸ்ரேயாவைப் பார்த்து இங்க எல்லாரும் பொறாமைப்பட, உங்களுக்கு மட்டும் பாவமா இருக்காமே...?

7. அமிதாப்புக்கும் ரஜினிக்கும் ஆறு வித்தியாசம் சொல்ல முடியுமா?

8. நடிகர் பிரசாந்த் தினமும் உங்களுக்கு போன் பண்ணி தேங்க்ஸ் சொல்றாராமே?

9. உங்க படப்பெட்டி சீக்கிரம் திரும்பி வந்தாலும் பணப்பெட்டி மட்டும் நிறைஞ்சுட்டே இருக்கே எப்படி?

10. உங்க 'ஆட்டோகிராப்'பை படமா எடுத்தா, க்ளைமாக்ஸ்ல எத்தனை தேவதாஸுங்க திரும்பிப் பார்த்து டாட்டா காட்டுவாங்க?

–பாமு



# மங்கள ஸ்நானம்!

**த**ன் பிள்ளை போன தினத்தில் எலலோருக்கும் கங்கா ஸ்நான புண்ணியம் கிடைக்க வேண்டும் என்று பூமாதேவி கேட்டுக் கொண்ட விசேஷம்தான், இன்றைக்கும் நாம் தீபாவளியன்று 'கங்கா ஸ்நானம்' செய்வது.

இந்த ஸ்நானத்திலே நாம் வைத்துக் கொள்கிற எண்ணெயில் லக்ஷ்மிதேவி வாஸம் பண்ண வேண்டும் என்றும், குளிக்கிற வெந்நீரில் கங்காதேவி வஸிக்க வேண்டும் என்றும் பூமாதேவி கேட்டுக்கொண்டாள். அதன் பின்பாதியை ஒட்டித்தான், பிரஸித்தமாக தீபாவளியன்று 'கங்கா ஸ்நானம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் தைலத்தில் லக்ஷ்மி இருக்கிறாள் என்பதை நாம் மறந்து விட்டோம். என்றாலும் அதுதான் தீபாவளிக் கதையை பூமாதேவியோடு மட்டுமல்லாமல், ஸ்ரீதேவியுடனும் சேர்த்து வைக்கிறது! வடக்கே தீபாவளியை விசேஷமாக லக்ஷ்மி பூஜையாகவே செய்து, வியாபாரிகள் புதுக்கணக்கு ஆரம்பிக்கிறார்கள். இதிலேயும் பூமாதேவியின் பெருமை தெரிகிறது. தன்னை எந்தத் தினுஸிலும் பெருமைப்படுத்திக் கொள்ளாமல், ஸ்ரீதேவிக்கும், பரமேச்வரனின் பத்னி ஸ்தானத்தில் நினைக்கப்படும் கங்காதேவிக்குமே பண்டிகையில் ஸம்பந்தம் இருக்கும்படி செய்திருக்கிறாள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

அருள்வாக்கு

# வட்டமேஜை

## வாசகர் எங்கள் சாய்ஸ்!

**வ**றுமையில் செம்மை, விருந்தோம்பல், உதவிக்கரம் நீட்டல் என்று பல தமிழ்க் குணங்கள் கொண்ட தமிழர் கதையாக நெஞ்சை ஈர மாக்கியது 'மந்திரமாவது நீறு'.

**கோவை, ராமு அர்விந்த்**

**ச**குனம் பார்ப்பவர்களுக்கு, கல்கியின் 'நானுமல்ல நரியுமல்ல' நகைச்சுவை கலந்த நல்ல பாடம்.

**கிழவனேரி, செ.சத்தியசீலன்**

**'கு**ரோர்பதியில் கேப்டன்', படித்து நாங்கள் சிரித்த சிரிப்பு பலகோடி பெறும்.

**லோயர் அணைக்கட்டு, பி.ராஜேந்திரன்**

**தீ**பிகாவின் பேட்டியே தீப்பிடிக் கிற மாதிரிதான் இருந்தது!

**மதுரை, என்.பாலகிருஷ்ணன்**

**க**ராத்தே தியாகராஜன் விஷயத்தால் தமிழ்நாடே தலை குனிந்து நிற்கிறது. வெட்கம், வேதனை!

**திருநெல்வேலி, டி.ஜவஹர்**



**கொ**க்கு தலையில் வெண்ணையை வைத்து கொக்கைப் பிடிப்பது போலத்தான் தங்கர்பச்சானோ, திருமாவளவனோ நடிகர் சங்கத் தலைவர்களாவார்களென்பது!

**குனியமுத்தூர், கே. பாலசுப்ரமணியன்**

**மா**ணவர்களுக்கு சைக்கிள் அன்பளிப்பு கொடுத்தது, மக்களின் வரிப்பணத்தில்தான் என்பதைப் புரிய வைத்த கார்ட்டூன், சிந்தனையைத் தூண்டியது.

**கரூர், ஆர்.ராஜலட்சுமி**

**சு**னந்தாஜியின் வெற்றி உங்கள் சாய்ஸ், வாசகர் எங்கள் சாய்ஸ்!

**ஆலப்பாக்கம், ஜெ.துரைராஜ்**

**போ**த்தீஸ் ரமேஷின் சக்சஸ் ஸ்டோரி, வெற்றிக்கு தன்னடக்கம் ரொம்பவும் தேவை என்பதைப் படம் பிடித்துக் காட்டியது.

**மதுரை, ஆர்.லட்சுமி**

# எங்கே என் கண்ணன்?

கடமையைச் சொன்ன
கடவுள் நானே...!
உடைமை என்று
ஒன்றுமில்லை
எல்லாம் வீணே...
- ஸ்ரீகிருஷ்ணன்

'நீ பிராமணனா?' என்று சீனு கேட்ட ஒற்றைக் கேள்வி, அவரை மனதளவில் வெகு தூரம் தள்ளி நிறுத்திவிட்டது. மௌனமாய் அவர் சாமான்களுடன் வாரணாசி ஸ்டேஷனுக்குள் நடந்தான் கணேஷ். ராஜம் சட்டென்று புரிந்துகொண்டாள்.

"என்னன்னா நீங்க... நீங்க கேட்டது இந்த பிள்ளையாண்டானுக்குப் பிடிக்கல போல இருக்கு. பாருங்க மூஞ்சி எப்படி மாறிடுத்து..."

"நீ பேசாம வா ராஜம். நான் ஆசார பங்கம் வந்துடக் கூடாதேன்னு கேட்டேன். இதுல தப்பென்ன இருக்கு?" என்று சீனுவும் சளைக்கவில்லை.

காரில் போகும்போது ராஜம் அவ்வப்போது கணேஷின் முகத்தைக் கவனிக்கத் தவறவில்லை. அவனிடம் ஒரு அசாத்யமான மௌனம். சிறிது தூரம் பயணம் அமைதியாகக் கழிய, சட்டென்று கார் டிராஃபிக்கில் இணைந்தது.

"பெரிய சிட்டி போல இருக்கு... டிராஃபிக்கைக் கவனிச்சியோ'' என்றார் ராஜத்திடம் சீனு.

"உக்கும்..." என்றாள்.

"என்ன பண்றது... இங்க வந்தா எல்லா பாவமும் போயிடும்னு சொல்லித் தொலைச்சுட்டாங்க. அதனால இந்த ஊரோட நீள அகலம் பற்றித் துளியும் கவலையே இல்லாம எல்லாப் பாவிகளும் இங்க வந்து, தங்களைச் சுத்தப்படுத்திக்கறாங்களோ இல்லையோ... இந்த ஊரை எவ்வளவு அழுக்காக் கணுமோ அவ்வளவு அழுக்காக்கிட்டாங்க..." என்றான் கணேஷ் சுருக்கென்று.

"அம்பிக்கு பாவ புண்ணியத்துல நம்பிக்கை இல்லை போல இருக்கு?" என்று சீனுவும் வாயைத் திறந்தார்.

"நான் என்னைப் போலவே எல்லாரையும் நினைக்கறவன். நான் எதை எல்லாம் எதிர்பார்க்கிறேனோ அதை கொடுக்கத் தயங்காதவன். என் வரைல உண்மைதான் கடவுள். மற்ற எல்லாமே கால காலமா வாழ்ந்த மனுஷங்களோட டிசைன் டிசைனான கற்பனைதான். இந்த பாவ புண்ணியத்தையும் சேர்த்துத்தான் சொல்றேன்..." என்றபடியே, அவன் இருக்கும் இடத்தின் முன் காரை நிறுத்தினான். இறங்கினார்கள். உள்ளே நடந்தனர்.

"பக்கத்துல ஒரு ரூம் காலியாதான் இருக்கு. உங்களுக்குத் தோதுபடும்னு நினைக்கறேன்..." என்ற கணேஷ், அப்படியே போய் சாவி வாங்கி வந்து அறையைத் திறந்து காட்ட, சீனுவுக்கும் பிடித்துவிட்டது.

''இங்க குளிக்க கிணறு இருக்கா?'' அடுத்து அவர் கேட்ட கேள்வி கணேஷுக்கு ஆச்சரியமாக இருந்தது.



''ஏன் நீங்க கங்கைல குளிக்கலையா?''

"இல்ல... நான் கயாவுல

ஓடற கங்கைலயே குளிச்சுக்கறேன். எங்க சம்பிரதாயப்படி அங்கதான் நாங்க குளிக்கணும்..."

"அங்க ஓடற அதே ஆறுதானே இங்கேயும்..."

"தெரியும் அம்பி. நான்



எங்க பெரியவா சொன்னதை அப்படியே பிடிச்சுண்டு நடக்கறவன். இந்த காசி, சைவ சம்பிரதாயத்துக்குன்னு உள்ளது. நான் வீர வைஷ்ணவன்...!"

"அதனால?"

"கயாவுல நான் பண்ண வேண்டியத பண்ணிக்கறேன். இப்படி நான் சொல்றதால இந்த காசி மேல எனக்கு துவேஷம் இருக்கறதா நினைச்சுக்காதே. ஒரு காலேஜ்ல ஒவ்வொருத்தருக்கு ஒரு விருப்பப்பாடம் இருக்கும். அதுலதான் அவாளுக்குப் பரீட்சையும் வைப்பா. பாஸும் பண்ணியாகணும். இந்த ஜென்மாவுல என் விருப்பப் பாடம் வைஷ்ணவம். நான் அந்தப் பாடத்துலயே இன்னும் நிறையத் தெளிய வேண்டியிருக்கு. நடுவுல பாதை மாறிப் போய் எதுலயும் ஒரு முழுமையில்லாம போய்ட விரும்பலை."

- அவர் சொன்னது கணேஷுக்கும் பிடித்திருந்தது.

"அப்போ இங்க இருக்கற காசி விசுவநாதர் கோயில், பைரவர் கோயில், அன்னபூரணி, விசாலாட்சி தரிசனம்னு எதுவும்



உங்களுக்குத் தேவை இல்லையா?"

"எல்லாம் எனக்கு இதோ இருக்கு பார்... இந்த பெட்டிக்குள்ள இருக்கிற கண்ணன்தான்" என்று பெட்டியைக் காண்பித்தார் அவர்.

"ஓ... அந்தப் பெட்டிக்குள்ள விக்ரகம் இருக்கா?"

"ஆமாம். அதுக்காகத்தான் இப்படி ஒரு பயணத் திட்டம். இந்த கண்ணன் என் முன்னோர்கள் பூஜித்த தெய்வம். இவன் பேசற கடவுள்..."

"அப்ப சாமி இல்லேன்னு சொல்றவா முன்னால இவனைக் கொண்டு போய் நிறுத்தி ஒருபிடி பிடிச்சுடலாமே..." அவன் கேள்வியில் சன்னமாய் ஒரு நக்கல்.

"ஏன் அம்பி... உனக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாதா?"

"ஆமாம்... கடவுளை மனுஷனோட ஒரு அழகான கற்பனையாத்தான் நான்

நினைக்கறேன். நான் நிஜத்தை பெருசா மதிக்கற ஒருத்தன். கற்பனையை ரசிப்பேன். ஒத்துக்கல்லாம் மாட்டேன்."

"அது சரி... நீ பேசலை. உன் வயசு பேசறது. உன்னைப் போல பேசின எவ்வளவு பேரை இந்தப் பூமி பாத்திருக்கு தெரியுமா?"

"அதனால...?"

"நீயும் ஒருநாள் மாறுவேன்னு சொல்றேன்..."

"இல்ல... ஒருவேளை உங்க கடவுள் நிஜமா இருந்தா, அவர் நான் மாறுறதை விரும்பமாட்டார். ஏன்னா எனக்குத் தெரிஞ்சு பக்தியால, பக்தர்களால அவர் ரொம்பத்தான் கஷ்டப்படறதா நான் நினைக்கறேன். இந்த ஊரையே எடுத்துக்குங்களேன். பக்தியாலயும் பக்தர்களாலயும் இது எவ்வளவு பாழ்பட்டுப் போயிருக்குத் தெரியுமா?"

"நீ எல்லாம் சரியா இருக்கணும்ங்கற ஆசைல பேசறே... ஆனா ஒண்ணை இழக்காம ஒண்ணை அடைய முடியாது. இந்த மாதிரி ஸ்தலங்கள் தங்களை அழுக்காக்கிண்டு பல லட்சம் மனுஷாளை மனசளவுல லேசானவனா ஆக்கி அனுப்பறது... இந்த மாதிரி ஸ்தலங்கள்லாம் மட்டும் இல்லேன்னா, நம்ம பாரத தேசம் ரொம்பவே கஷ்டப்படும். ஒரு மொழி, ஒரு ஜாதின்னு இருக்கற நாடுகளே குண்டுவெடிப்பு, தீவிரவாதம்னு சீரழிஞ்சிண்டு இருக்கு. இங்க கிட்டத்தட்ட நூத்துப் பத்து பாஷை. போதாக்குறைக்கு ஆயிரத்தெட்டு ஜாதி. அதுல அவாளவாளுக்குன்னு பழக்கவழக்கங்கள் வேற... இதுக்கு நடுவுல நாம பரஸ்பரம் ஒத்துமையோட பாவ புண்ணியங்களுக்குப் பயந்துண்டு வாழ்ந்துண்டுருக்கோம்னா, அதுக்கு நம்ம மண்ணோட ஆன்மிக நெறிதான் காரணம். கடவுள்னு ஒருத்தர் கிடையாது... பாவபுண்ணியமெல்லாம் நீ சொல்ற மாதிரி கற்பனைன்னா இந்த பூமி இப்படியா இருக்கும்?"

- சீனு சொன்னதிலும் பொருள் இருப்பது போலத்தான் தோன்றிற்று. வேற்றுமையில் நாம் ஒற்றுமையாகத்தான் இருக்கிறோம். ஆனாலும் இங்கேயும் குண்டுகள் வெடிக்கத்தானே செய்கின்றன? அது பற்றிக் கேட்க நினைத்தவன், பிறகு பெரிய உபன்யாசத்துக்கு அது அடி போட்டுவிடும் என்று எண்ணியவனாக "சரி... நீங்க உங்க பூஜை புனஸ்காரங்களை முடிச்சிட்டு கூப்பிடுங்கோ... கயாவுக்கு காலையே போய்ட்டு வந்துடலாம். எல்லா ஏற்பாடும் பண்ணி வெச்சிருக்கேன்..." என்றான்.

அப்படியே அவர்களை விட்டுவிட்டு அறையை விட்டு வெளியே வந்தவன் கண்களில், சிலர் விற்றுக் கொண்டிருந்த பிரம்புக் கூடைகள் கண்ணில் பட்டன. சற்று முன்புதான் சீனுவிடம் இருந்த மூங்கில் பிரம்புக் கூடை, கலையழகுடன் அவன் கண்ணைப் பறித்திருந்தது. இப்போது அச்சு அசலாக அதே போன்ற கூடை... அருகே சென்று விசாரித்து ஒரு கூடையை வாங்கிக் கொண்டு நடந்தான். எதிரில் ஜோதிடர் பஞ்சாட்சரம் வருவதைப் பார்த்தவன், அவரிடம் சிக்கினால் ஆய்ந்துவிடுவார் என்று கருதி அப்படியே திரும்பி ஓர் ஒடுக்குச் சந்துக்குள் நுழையப் பார்த்தான். அவரோ அவனைத்தான் தேடிக்கொண்டு வந்தபடி இருந்தார். அவன் ஓடி ஒளிவதைக் கவனிக்காதபடி அவன் இருக்கும் அறையைத் தேடிச் சென்று கதவைத் தட்டினார்.

திறந்துகொண்ட கதவுக்குப் பின்னால் ராஜம். ஜோசியரிடம் ஒரு சின்ன திக்குமுக்காடல். அவருக்கு ராஜமும் சீனுவும் நல்ல பரிச்சயம்.

"அம்மாடி நீயா...?" என்றார் வியப்போடு.

"அட ஜோசியர் மாமாவா? உள்ற

# அடுத்த இதழில்...

## சின்னான், உலகம் இவ்வளவுதான், இளமை கல்கி...

வாங்கோ'' என்று அவனும் அவரை உள்ளே அழைத்தான். உள்ளே சீனு குளித்து முடித்து திருமண் சார்த்திக் கொண்டு திருவாராதனையில் இருந்தார். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அப்துல் கலாமே வந்தாலும் ஜாடை பாஷைதான். காத்திருக்க வேண்டியதுதான். ஜோசியருக்கும் அது தெரியும். சீனுவைப் பார்த்தவர் அப்படியே கண்ணனை, சாளக்கிராம கற்களை எல்லாம் ஒரு பார்வை பார்த்தார். தன்வசம் இதே சாளக்கிராம கற்கள் ஒரு மகாசேதியைச் சொல்லி விட்டு துணிப்பைக்குள் முடங்கிக் கிடப்பது ஞாபகத்தில் வந்தது.

''அம்மாடி... நான் என் இருப்பிடம் வரை போய்ட்டு வந்துடறேன். அதுக்குள்ள சீனுவும் பூஜையை முடிச்சிடுவார். வந்து விவரமா பேசறேன்'' என்று திரும்பி நடந்தார்.

அரைமணியில் திரும்பி வந்தவரிடம் சாளக்கிராம கற்களும், அந்த ஏடுக் கட்டுகளும் இருந்தன. சீனுவும் கண்ணனுக்குத் தீபதூபம் காட்டி முடித்து தீர்த்தத்தை ராஜத்துக்கும் அப்படியே ஜோதிடருக்கும் கொடுத்தார்.

ஜோதிடரும் வாங்கிக் குடித்தவராக, ''சீனு உங்களை நான் இங்க பார்ப்பேன்னு கொஞ்சம்கூட நினைக்கல. அப்புறம் இந்தப் பைய பாருங்கோ... அவ்வளவும் சாளக்கிராமங்கள். கங்கைக் கரைல ஒரு சாது கொடுத்தது. எப்படியோ என் கைக்கு வந்து சேர்ந்தது. எனக்கு இது பவித்ரமானதுன்னு தெரியும். ஆனா இதை எப்படி ஆராதிக்கறதுன்னு தெரியாது. இந்தாரும்... இதையும் உங்க சாளக்கிராமங்களோட சேர்த்துண்டு பூஜை செய்யும்'' என்று பையை நீட்டினார்.

சரியான அழுக்குப் பை. அதனுள் யாரோ கொடுத்ததாகக் கூறும் சாளக்கிராம கற்கள். சீனுவுக்கு சட்டென்று வாங்கிக் கொள்ளத் தோன்றவில்லை. குழப்பமாக இருந்தது. அப்போது வெளியே இருந்து ஒரு குரல் கேட்டது. அதுவும் நல்ல தமிழ்க் குரல்!

''சீனிவாசா... வாங்கிக்கோப்பா... என்ன யோசனை?''

சீனு அதிர்ந்துபோய் வெளியே எட்டிப் பார்த்தார். (தொடரும்)

வந்தாச்சு...வந்தாச்சு...
தீபாவளி வந்தாச்சு...!
நீங்க ஆவலோடு எதிர்பார்த்த
கல்கி தீபாவளி மலரும் வந்தாச்சு...!!



கல்கி
தீபாவளி மலர் '05

உங்கள் கடைக்காரரிடம்
உடனே முன்பதிவு செய்யுங்க!

